மக்களின் பார்வையில் சாதாரணமாகிவிட்ட

# தீமைகள்!

## எச்சரிக்கை!!






The Cooperative Office For Call And Guidance at Sultanah
Under the Supervision of
Ministry of Islamic Affairs Endowment and Call and Guidance
Tel. 4240077 Fax 4251005 P.O.Box 92675 Riyadh 11663 - Al-Swaidi Str. K.S.A
E-mail : Sultanah@hotmail.com

# محرمات استهان بها كثير من الناس

**ترجمه إلى اللغة التاميلية:**

شعبة توعية الجاليات في الزلفي

**الطبعة الأولى: ٥/١٤٢٤ هـ.**


ⓒ شعبة توعية الجاليات بالزلفي ، ١٤٢٤ هـ

فهرسة مكتبة الملك فهد الوطنية أثناء النشر

شعبة توعية الجاليات بالزلفي .

محرمات استهان بها كثير من الناس . / شعبة توعية الجاليات بالزلفي - الزلفي ، ١٤٢٤ هـ

١٢٨ ص ؛ ١٧ سم

ردمك : ٧-٢٢- ٨٦٤-٩٩٦٠

(النص باللغة التاميلية)

١- الحلال والحرام ٢- الفتاوى الشرعية أ. العنوان

ديوي :٢٥٩ ٣٦٥١ /١٤٢٤

رقم الإيداع : ٣٦٥١ /١٤٢٤

ردمك : ٧-٢٢- ٨٦٤-٩٩٦٠

صف وإخراج: شعبة توعية الجاليات في الزلفي

# محرمات استهان بها الناس يجب الحذر منها

# மக்களின் பார்வையில் சாதாரணமாகிவிட்ட தீமைகள்! எச்சரிக்கை!!

## முன்னுரை

எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! திண்ணமாக அல்லாஹ் சில விஷயங்களைக் கடமையாக்கியுள்ளான். அவற்றைப் பாழாக்கி விடக் கூடாது. சில வரம்புகளை நிர்ணயித்துள்ளான். அவற்றை மீறக் கூடாது. பல விஷயங்களைத் தடை செய்துள்ளான். அவற்றைக் குலைக்கக் கூடாது.

நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ் தன் வேதத்தில் எவற்றை ஹலாலாக்கியுள்ளானோ அவை ஹலாலாகும். எவற்றை ஹராமாக்கியுள்ளானோ அவை ஹராமாகும். எவை பற்றி அவன் ஒன்றுமே கூறவில்லையோ அவை சலுகையாகும். அல்லாஹ் அளித்திருக்கும் சலுகையை ஏற்றுக் கொள்ளுங்கள். திண்ணமாக அல்லாஹ் எதையும் மறப்பவனல்ல. பிறகு ' உமது இறைவன் எதையும் மறப்பவனல்ல' (19:64) என்ற வசனத்தை ஓதிக் காட்டினார்கள்.
அறிவிப்பவர்: அபுத்தர்தா (ரழி), நூல்: ஹாகிம்

விலக்கப்பட்டவைகள் தான் அல்லாஹ்வின் வரம்புகளாகும். அல்லாஹ் கூறுகிறான்: 'இவை அல்லாஹ்வினால் ஏற்படுத்தப்பட்ட வரம்புகளாகும். எனவே அவற்றை நீங்கள் மீறாதீர்கள்.'(2:187) தான் ஏற்படுத்திய வரம்புகளை மீறுபவர்களையும் தான் விலக்கிய காரியங்களைச் செய்பவர்களையும் திண்ணமாக அல்லாஹ் எச்சரித்துள்ளான். அல்லாஹ் கூறுகிறான்: எவர்கள் அல்லாஹ்வுக்கும், அவன் தூதருக்கும் மாறு

செய்து, அவனுடைய வரம்புகளை மீறுகின்றார்களோ அவர் களை அல்லாஹ் நரகில் தள்ளுவான். அதில் அவர்கள் நிலை யாக வீழ்ந்து கிடப்பார்கள். அவர்களுக்கு அங்கு இழிவுபடுத் தும் தண்டனையும் இருக்கிறது. (4:14)

விலக்கப்பட்டவைகளைத் தவிர்ப்பது கடமையாகும். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்: நான் உங்களுக்கு எதைத் தடுத்துள்ளேனோ அதை விட்டும் தவிர்ந்து கொள்ளுங்கள். நான் உங்களுக்கு எதை ஏவியுள் ளேனோ அதை முடிந்த அளவு செய்யுங்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரழி), நூல்: முஸ்லிம்

மனோ இச்சையைப் பின்பற்றக் கூடிய, பலவீனமான உள் ளங்களுடைய, சில குறைமதியுடையோர் தொடர்ந்து ஹரா மானவற்றைச் செவியுறுகிறபோது வெறுப்படைந்து, கடுப்பாகி இவ்வாறு கூறுவதைக் காணமுடிகின்றது: எல்லாம் ஹராம் தானா? நீங்கள் எதையும் ஹராமாக்காமல் விடுவதில்லை. இதனால் எங்களின் வாழ்வை சோர்வடையச் செய்து விட்டீர் கள், எங்கள் வாழ்க்கையை வெறுப்படையச் செய்து விட்டீர் கள். எங்களுடைய உள்ளங்களில் நெருக்கடியை ஏற்படுத்தி விட்டீர்கள். ஹராம்-ஹராமாக்குதல் என்பதைத் தவிர வேறு எந்த வேலையும் உங்களுக்கு இல்லை! இறைமார்க்கம் எளிமையானது. மார்க்க விஷயங்கள் விசாலமானவை. அல்லாஹ் மிகவும் மன்னிப்பவனும் மிக்க கருணை உள்ள வனும் ஆவான்.

இத்தகையவர்களுக்கு நாம் கூறும் பதில் இதுதான்: உண் மையில் அல்லாஹ், தான் நாடியவற்றைச் சட்டமாக்குகி றான். அவனுடைய சட்டத்தை மறு பரிசீலனை செய்பவர் யாரும் கிடையாது. அவன் யாவற்றையும் அறிந்தவன், நுண் ணறிவாளன். அவனே தான் நாடியவற்றை ஹலாலாகவும் தான் நாடியவற்றை ஹராமாகவும் ஆக்குகின்றான். அவனு

டைய சட்டத்தை நாம் பொருந்திக் கொள்வதும் அதற்கு முழுமையாக கீழ்ப்படிவதுமே அல்லாஹ்வுக்கு நாம் அடிமைப் பட்டிருப்பதன் அடிப்படைகளில் உள்ளவையாகும்.

இறைச்சட்டங்கள் யாவும் இறைவனுடைய ஞானம், விவே கம் மற்றும் நீதியின் மூலம் பெறப்பட்டவையாகும். அவை வீண் விளையாட்டானவையல்ல. இதோ அல்லாஹ் கூறுகிறான்: உம் முடைய இறைவனின் வாக்கில் உண்மையும் நீதியும் முழுமை யாக உள்ளன. அவனுடைய கட்டளைகளை மாற்றக் கூடிய வர் எவருமிலர். அவன் அனைத்தையும் செவியேற்பவனாக வும் நன்கறிபவனாகவும் இருக்கிறான். (6:115)

மேலும் அல்லாஹ் ஹலால் ஹராமுக்கு ஒரு அடிப்படைச் சட்டத்தை நமக்குத் தெளிவுபடுத்தியுள்ளான். '(இந்த இறைத் தூதர்) அவர்களுக்குத் தூய்மையானவற்றை ஆகுமாக்குகி றார், தூய்மையில்லாதவற்றை தடை செய்கிறார் '(7:157) என்று அவன் கூறியுள்ளான்.

எனவே தூய்மையானவை ஹலாலாகும். தூய்மையற்றவை ஹராம் ஆகும். ஆக ஹலால், ஹராம் ஆக்குகின்ற உரிமை அல்லாஹ்வுக்கு மட்டுமே உரியது. அந்த உரிமை தனக்கு இருப்பதாக எவன் வாதிடுகின்றானோ அல்லது வேறொரு வருக்கு இருப்பதாக எவன் ஒத்துக்கொள்கின்றானோ அவன் இஸ்லாத்தை விட்டும் வெளியேற்றக் கூடிய பெரிய அளவி லான நிராகரிப்பை மேற்கொண்ட நிராகரிப்பாளன் ஆவான். அல்லாஹ் கூறுகிறான்: அல்லாஹ் அனுமதியளிக்காதவற்றை (தீனின்) இறைமார்க்கத்தின் நெறிமுறைகள் என அவர்க ளுக்கு வகுத்துக் கொடுக்கும் இணைக் கடவுளர்கள் அவர் களுக்கு உண்டா? (42:21)

குர்ஆன், ஹதீஸ் பற்றி அறிந்த கல்வியாளர்களைத் தவிர வேறு எவரும் ஹலால், ஹராம் குறித்துப் பேசுவது ஆகுமான

தல்ல. எவ்வித ஞானமுமின்றி ஹலால், ஹராம் என்று சட்டம் பேசுகின்றவர்கள் குறித்து கடுமையான எச்சரிக்கை வந்துள்ளது. அல்லாஹ் கூறுகிறான்: உங்கள் நாவுகள் இன்ன பொருள் ஹலால், இன்ன பொருள் ஹராம் என்று பொய் (சட்டங்க)ளைக் கூறுவது போன்று அல்லாஹ்வின் மீது பொய்களை ஏற்றிச் சொல்லாதீர்கள். (16:116)

சந்தேகமின்றி - திட்டவட்டமாக விலக்கப்பட்டவைகள் திருக்குர்ஆனிலும் ஹதீஸிலும் கூறப்பட்டுள்ளன. சான்றாக அல்லாஹ் கூறுகிறான்: (நபியே!) கூறும்! வாருங்கள், இறைவன் உங்களுக்கு விலக்கியிருப்பவற்றை நான் கூறுகிறேன். யாரையும் எதனையும் அவனுக்கு இணையாக்காதீர்கள், பெற்றோருக்கு நன்மை செய்யுங்கள், வறுமைக்குப் பயந்து உங்கள் குழந்தைகளைக் கொன்று விடாதீர்கள்... (6:151)

இவ்வாறே ஹதீஸிலும் விலக்கப்பட்டவைகள் ஏராளம் கூறப்பட்டுள்ளன. உதாரணத்திற்கு நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்: மது, செத்தவைகள், பன்றி, சிலைகள் ஆகியவற்றை விற்பதை திண்ணமாக அல்லாஹ் தடை செய்துள்ளான். (அபூதாவூத்) அல்லாஹ் ஒன்றைத் தடை செய்து விட்டால் அதை விற்பதையும் தடை செய்து விடுவான் என்பதும் நபிமொழி. (தாரகுத்னி)

சில வசனங்களில் குறிப்பிட்ட சில வகையைச் சேர்ந்த ஹராம் பற்றி மட்டும் கூறப்படும். உதாரணமாக, உணவுகளில் எவை எவை ஹராம் என்று அல்லாஹ் குறிப்பிட்டதைப் போன்று. அல்லாஹ் கூறியுள்ளான்: தானாக செத்தவைகள், இரத்தம், பன்றி இறைச்சி, அல்லாஹ் அல்லாதவரின் பெயர் கூறி அறுக்கப்பட்டவை, கழுத்து நெறித்துக் கொல்லப்பட்டவை, கீழே விழுந்து செத்தவை, கொம்பால் முட்டப்பட்டு செத்தவை, கொடிய விலங்குகளால் கடித்துக் குதறப்பட்டவை ஆகிய யாவும் உங்களுக்கு விலக்கப்பட்டுள்ளன.

எவற்றை நீங்கள் உயிருடன் அறுத்தவிட்டீர்களோ அவற்றைத் தவிர! இன்னும் பலி பீடங்கள் மீது அறுக்கப்பட்டவையும் குறி பார்ப்பதன் மூலம் விதிகளை நிர்ணயிப்பதும் (உங்களுக்கு விலக்கப்பட்டுள்ளன)... (5:3)

மணம் முடிக்க விலக்கப்பட்டவர்களைக் குறிப்பிடும்போது அல்லாஹ் பின் வருமாறு கூறுகின்றான்: (பின் வரும் பெண்களை மணம்புரிவது) உங்களுக்கு விலக்கப்பட்டுள்ளது: உங்கள் தாய்மார்கள், உங்கள் புதல்விகள், உங்கள் சகோதரிகள், மற்றும் உங்கள் தந்தையின் உடன் பிறந்த சகோதரிகள், உங்கள் அன்னையின் உடன் பிறந்த சகோதரிகள், மேலும் சகோதரனின் புதல்விகள், சகோதரியின் புதல்விகள், மேலும் உங்களுக்குப் பாலூட்டிய செவிலித் தாய்மார்கள், உங்கள் பால்குடிச் சகோதரிகள், மேலும் உங்கள் மனைவியரின் தாய்மார்கள், நீங்கள் உடலுறவு கொண்ட மனைவியர் (தம் முன்னாள் கணவர் மூலம்)பெற்றெடுத்து, உங்கள் மடியில் வளர்ந்துள்ள புதல்விகள், ஆனால் (திருமணமாகி) நீங்கள் அம்மனைவியருடன் உடலுறவு கொள்ளவில்லையாயின் (அவர்களை விடுத்து அவர்களின் புதல்வியரை மணந்து கொள்வதில்) உங்கள் மீது எத்தகைய குற்றமும் இல்லை.

மேலும் உங்கள் முதுகந்தண்டுகளிலிருந்து பிறந்த உங்கள் புதல்வர்களின் மனைவியரை மணம் புரிவதும், இரு சகோதரிகளை நீங்கள் ஒருசேர மனைவியராக்குவதும் (தடை செய்யப்பட்டுள்ளன).ஆனால் இதற்கு முன் நடந்து விட்டதைத் தவிர. திண்ணமாக அல்லாஹ் மன்னிப்பு வழங்குபவனாகவும் கருணை புரிபவனாகவும் இருக்கின்றான். (4:23)

மேலும் பொருளீட்டுவதில் விலக்கப்பட்டவைகளையும் குறிப்பிட்டுள்ளான். 'அல்லாஹ் வியாபாரத்தை ஹலாலாகவும் வட்டியை ஹராமாகவும் ஆக்கியுள்ளான். (2:275)

தன் அடியார்கள் மீது மிகவும் கருணை உடையவனாகிய அல்லாஹ் தூய்மையானவற்றிலிருந்து ஏராளமானவற்றை, பல்வேறு வகையானவற்றை வரையறையில்லாமல் நமக்கு ஆகுமாக்கியுள்ளான். அதனால் தான் இவை இவையெல்லாம் ஆகுமானவை என்று அவன் விவரித்துச் சொல்லவில்லை. காரணம் அவை வரையறுக்க முடியாத அளவுக்கு ஏராளம் உள்ளன. ஆனால் எவை எவை எல்லாம் ஹராமாக்கப்பட்டவை என்று விவரமாகக் கூறியிருப்பதற்குக் காரணம் அவை இவ்வளவு தான் என வரையறுக்குட்பட்டவை என்பதாகும். மேலும் நாம் அவற்றை எளிதில் அறிந்து அவற்றை விட்டும் விலகிட வேண்டும் என்பதும் நோக்கமாகும்.

அல்லாஹ் கூறுகிறான்: நீங்கள் நிர்ப்பந்திக்கப்பட்ட சூழ் நிலைகளில் அன்றி பிற நேரங்களில் எவை எவை உங்களுக்கு விலக்கப்பட்டவை என்பதை அல்லாஹ் உங்களுக்கு விவரித்துக் கூறியுள்ளான். (6:119) மனிதர்களே! பூமியிலுள்ளவற்றில் தூய்மையான அனுமதிக்கப்பட்ட பொருட்களைப் புசியுங்கள். (2:168)

அவனுடைய கருணையில் இதுவும் ஒன்றாகும்: ஒவ்வொரு பொருளின் அசல் தன்மை ஹலாலாகும் என்று அவன் நிர்ணயித்துள்ளான். அது ஹராம் என்று அறிவிக்கக்கூடிய ஆதாரம் கிடைத்தாலே தவிர! இது அல்லாஹ்வின் அருட்கொடையையும் தனது அடியார்கள் மீது உள்ள அவனுடைய பரந்த மனப்பான்மையையுமே எடுத்துக் காட்டுகிறது. எனவே நாம் அவனுக்குக் கீழ்ப்படிவதும் அவனைப் புகழ்ந்து அவனுக்கு நன்றி செலுத்துவதும் கடமையாகும்.

சிலருக்கு இன்னின்னவைகள் ஹராம் என்று கூறப்படுமானால் மார்க்கச் சட்டங்கள் அவர்களுக்குப் பாரமாகத் தோன்றுகின்றன. இது அவர்களுடைய பலவீனமான ஈமானையும் மார்க்க விஷயங்களில் விளக்கமின்மையையுமே காட்டுகிறது.

இவர்கள் என்ன தங்களுக்கு இன்னின்னவை ஹலால் எனக் கூறப்பட வேண்டும், ஹலாலின் வகைகள் அனைத்தையும் எண்ணிக்கையோடு இவர்களுக்குச் சொல்ல வேண்டும் என விரும்புகிறார்களா- இறைமார்க்கம் எளிதானது தான் என மன திருப்தி கொள்வதற்கு? அல்லது இன்னின்னவை தூய் மையானவை என பட்டியலிடப்பட வேண்டும் என்று விரும்பு கிறார்களா- இறைமார்க்கத்தின்படி வாழ்வது ஒன்றும் சிரம மில்லை என்று நிம்மதியாக இருப்பதற்கு?

அறுக்கப்பட்ட ஆடு, மாடு, ஒட்டகம், முயல், மான், மலை யாடு, கோழி, புறா, ஆண் வாத்து, பெண் வாத்து, தீக்கோழி ஆகியவற்றின் மாமிசங்கள் ஹலாலாகும். இன்னும் செத்த வெட்டுக்கிளி மற்றும் மீன், காய்கறிகள், கீரைகள், பழங்கள், இன்னும் ஏனைய பயனுள்ள தானியங்கள், பயிர்கள் ஆகிய வையும் ஹலாலாகும் என்று சொல்ல வேண்டும் என்று விரும்பு கிறார்களா?

தண்ணீர், பால், தேன், எண்ணை, வெனிகர், உப்பு, மசா லா சாமான்கள் ஆகியவையும், மரம், இரும்பு, மணல், கற்கள், பிளாஸ்டிக், கண்ணாடி, இரப்பர் ஆகியவற்றைப் பயன்படுத்துவ தும் ஹலாலாகும். கால்நடைகள், கார், புகைவண்டி, கப்பல், விமானம் போன்றவற்றில் பயணம் செய்வதும் ஹலாலாகும்.

ஏ.சி, ஃபிரிஜ், வாஷிங் மிஷின், துணிகளை உலர்த்தும் இயந்திரம், திருகை, கிரைண்டர், மிக்ஸி ஆகியவற்றை உப யோகிப்பதும், மருத்துவம், பொறியியல், கணிதம், விண்வெளி மற்றும் வானிலை ஆராய்ச்சி, கட்டடவியல் ஆகியவற்றுக்கும், தண்ணீர், பெட்ரோல், உலோகங்கள் மற்றும் தாதுப் பொருட் களை வெளியேற்றுவதற்கும், அவற்றை சுத்தப்படுத்தி, பக்கு வப்படுத்துவதற்கும் பயன்படக்கூடிய கருவிகள், அச்சு இயந் திரங்கள் மற்றும் கம்யூட்டர் சாதனங்கள் ஆகியவற்றைப் பயன்படுத்துவதும் ஹலால் ஆகும்.

மேலும் பருத்தி, சணல், கம்பளி ஆடைகள், அனுமதிக்கப் பட்ட பிராணிகளின் தோலாலும் ரோமத்தாலும் தயாரிக்கப் பட்ட ஆடைகள், நைலான், பாலிஸ்டர் ஆடைகள் ஆகியவற் றை அணிவதும் ஹலால். மேலும் திருமணம், வியாபாரம், கொ டுக்கல், வாங்கல், நற்காரியங்களுக்குப் பொறுப்பேற்றல், தன் பொறுப்பை பிறரிடம் ஒப்படைத்தல், வாடைகைக்கு விடுதல், தச்சு, கொல்லர்த் தொழில், சாதனங்களைப் பழுது பார்த் தல், ஆடு மேய்த்தல் ஆகியவற்றின் அசல் தன்மை ஹலால் ஆகும் என்றெல்லாம் விபரமாகச் சொல்லப்பட வேண்டுமென்று எதிர்பார்க்கிறார்களா?

இவ்வாறாக ஹலாலானவைகளை அடுக்கிக் கொண்டே சென்றால் அவற்றின் பட்டியல் முடிந்து விடுமா என்ன? இவர் களுக்கு என்ன நேர்ந்துவிட்டது? இவர்கள் எந்த விஷயத் தையும் புரிந்து கொள்வதில்லையே!

இறைமார்க்கம் எளிமையானது என்று இவர்கள் எடுத்து வைக்கும் வாதத்தின் நிலை என்னவெனில் அது சத்தியமே! ஆனால் அதற்குத் தவறான பொருள் கொடுக்கப்பட்டுள் ளது. இந்த மர்க்கத்தின் எளிமை என்பதன் கருத்து மக்க ளின் மன இச்சைகள் மற்றும் அபிப்ராயத்தைப் பொறுத்தல்ல. மாறாக ஷரீஅத் சட்டங்களைப் பொறுத்ததாகும். இறை மார்க்கம் எளிமையானது என்று சொல்லிக் கொண்டு (அது எளிமையானது தான் அதில் சந்தேகமில்லை) ஹராம் என விலக்கப்பட்டவைகளைச் செய்வதற்கும் சட்டப்பூர்வமாக அளிக்கப்பட்ட சலுகைகளைச் செய்வதற்கும் பெரிய வேறு பாடு உள்ளது. சட்டப்பூர்வமான சலுகைகளுக்கு உதார ணம்: தொழுகைகளைச் சேர்த்துத் தொழுதல் (ஜம்வு), சுருக்கித் தொழுதல் (கஸ்ர்), பயணத்தில் நோன்பை விடுதல், காலுறைகள் மீது மஸஹ் செய்தல் (இந்தச் சலுகை பயணத் தில் உள்ளவர்களுக்கு மூன்று நாட்களும், ஊரில் தங்கியிருப்

பவர்களுக்கு ஒரு நாளும் ஆகும்), தண்ணீரைப் பயன்படுத்த முடியாது போனால் தயம்மும் செய்தல், நோயாளி ஜம்வு செய்து தொழுதல், மழைக் காலங்களில் ஜம்வு செய்தல், நிச்சயதார்த்தம் பேசிய ஆண் நிச்சயதார்த்தம் பேசப்பட்ட பெண்ணைப் பார்ப்பதை ஆகுமாக்குவது, சத்தியத்தை முறித் ததற்குரிய பரிகாரமான அடிமையை விடுவித்தல், ஏழைக ளுக்கு உணவு அளித்தல், உடை அளித்தல் ஆகியவற்றில் ஏதாவது ஒன்றைச் செய்தல், நிர்ப்பந்தமான நேரத்தில் இறந்தவைகளை உண்ணுதல்.

ஒரு முஸ்லிம் இதையும் அறிந்து கொள்வது அவசியமா கும். அதாவது சில விஷயங்கள் விலக்கப்பட்டிருப்பதில் சில தத்துவங்கள் இருக்கின்றன. அவை வருமாறு:

அ) விலக்கப்பட்டவைகளைக் கொண்டு அல்லாஹ் தன் அடியார்களை சோதிக்கின்றான். இது விஷயத்தில் அவர்கள் எப்படி நடந்து கொள்கிறார்கள் என்று பார்க்கின்றான்.

நரகவாசிகளை விட்டும் சுவனவாசிகள் வேறுபட்டிருப்ப தன் காரணங்களில் ஒன்று என்னவெனில் நரகவாசிகள் (இவ் வுலகில்) மனோ இச்சைகளில் மூழ்கிக் கிடக்கின்றார்கள். அம் மனோ இச்சைகளால் தான் நரகம் சூழ்ந்துள்ளது. சொர்க் கவாசிகள் (இவ்வுலகில்) மனதிற்கு விருப்பமில்லாத காரியங் களை சகித்துக் கொள்கின்றார்கள். மனதிற்கு விருப்பமில் லாத காரியங்களால் தான் சொர்க்கம் சூழ்ந்துள்ளது. இச் சோதனை இல்லையெனில் இறைவனுக்குக் கீழ்ப்படிபவன் யார்? இறைவனுக்கு மாறு செய்பவன் யார்? என்பது தெளிவா காமல் போய்விடும்.

நம்பிக்கையாளர்கள் இறைச்சட்டங்களை எடுத்து நடப்ப தால் ஏற்படக்கூடிய சிரமங்களை நற்கூலி கிடைக்கும் என்ற எண்ணத்துடனும், அல்லாஹ்வின் திருப்பொருத்தத்தை அடைவதற்காக அவனுடைய கட்டளைகளை ஏற்று நடக்க

வேண்டும் என்ற நோக்குடனும் பார்க்கின்றனர். இதனால் அச்சிரமங்கள் அவர்களுக்கு எளிதாகின்றன.

ஆனால் நயவஞ்சகர்களோ இறைச்சட்டங்களைப் பின்பற்றுவதால் ஏற்படுகின்ற கஷ்டங்களை துன்பம், தொல்லை மற்றும் இழப்புகளாகப் பார்க்கின்றனர். அதனால் அவற்றைப் பின்பற்றுவது அவர்களுக்குச் சிரமமாகத் தோன்றுகின்றது.

ஆ) இறைவனுக்குக் கீழ்படிந்து வாழ்பவன் விலக்கப்பட்டவற்றைத் தவிர்ந்து கொள்வதன் மூலம் ஈமானின் இன்பத்தை சுவைப்பான். எவ்வாறெனில் அல்லாஹ்வுக்காக எதையேனும் ஒருவன் தவிர்த்துக் கொண்டால் அதற்குப் பகரமாக அதை விடச் சிறந்ததை அல்லாஹ் அவனுக்குக் கொடுப்பான். மேலும் அவனது உள்ளத்தில் ஈமானின் இன்பத்தை அவன் உணர்வான்.

வாசக நேயர்களே! இச்சிறிய நூலில் ஷரீஅத் தடை செய்துள்ள பல்வேறு காரியங்களை திருக்குர்ஆன் மற்றும் நபிமொழியின் ஆதாரங்களுடன் நான் குறிப்பிட்டுள்ளதைக் காண்பீர்கள். விலக்கப்பட்ட இக்காரியங்கள் பெரும்பாலான முஸ்லிம்களிடையே பரவலாகக் காணப்படுபவையாகும். பெரும்பாலும் அவர்கள் செய்யக் கூடியவையாகும். இவற்றைக் குறிப்பிடுவதன் நோக்கம் மக்களுக்கு நலம் நாடுவதையும் தெள்ளத் தெளிவாக எடுத்துச் சொல்வதையும் தவிர வேறு இல்லை.

எல்லாம் வல்ல அல்லாஹ்விடம் எனக்கும் என் சகோதர முஸ்லிம்களுக்கும் நேர் வழியையும் அதற்கான உதவியையும் அவன் விதித்த வரம்புகளை மீறாமல் வாழும் பாக்கியத்தையும் வேண்டுகிறேன். அவன் விலக்கப்பட்டவற்றை விட்டும் நம்மைத் தூரமாக்குவானாக! தீமைகளை விட்டும் நம்மைப் பாதுகாப்பானாக! அல்லாஹ் மிகச் சிறந்த பாதுகாவலனும் கருணையாளர்களிலேயே மிகவும் கருணையாளனுமாவான்.

## இணைவைத்தல்

விலக்கப்பட்டவைகளில் பொதுவாக இதுவே மிகப் பெரிய தாகும். அபூபக்ரா (ரழி) அறிவிப்பதாவது: பெரும் பாவங்களில் மிகப் பெரும் பாவத்தை நான் உங்களுக்கு அறிவிக்கட்டுமா? என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மூன்று முறை கேட் டார்கள்! அதற்கு நாங்கள், அல்லாஹ்வின் தூதரே! அறிவி யுங்கள் என்றோம். அதற்கவர்கள், அல்லாஹ்வுக்கு இணை வைப்பது, பெற்றோரை நிந்திப்பது என்று கூறினார்கள். சாய்ந் திருந்த அவர்கள் நிமிர்ந்து உட்கார்ந்து, அறிந்து கொள் ளுங்கள்! பொய் சொல்வதும் பொய் சாட்சி கூறுவதும் தான், அறிந்து கொள்ளுங்கள்! பொய் சொல்வதும் பொய் சாட்சி கூறுவதும்தான் என்று கூறினார்கள். நிறுத்த மாட்டார்களா? என்று நான் கூறும் அளவுக்கு அவற்றைத் திரும்பத் திரும்பக் கூறிக்கொண்டிருந்தார்கள். புகாரி (5976), முஸ்லிம்

எல்லாப் பாவங்களையும் அல்லாஹ் மன்னித்துவிடுவான் இணைவைத்தலைத் தவிர. எனவே இணைவைத்தலுக்கு பிரத்தியேமாக அல்லாஹ்விடம் பாவமன்னிப்புத் தேட வேண் டும். அல்லாஹ் கூறுகிறான்: திண்ணமாக அல்லாஹ் தனக்கு இணைவைக்கப்படுவதை மன்னிக்கவே மாட்டான். அதைத் தவிர ஏனையவற்றை தான் நாடியவர்களுக்கு மன்னித்து விடுவான். (4:48)

இணைவைத்தலில் இஸ்லாத்தை விட்டும் வெளியேற்றி விடக்கூடிய மிகப் பெரும் இணைவைத்தலும் உண்டு. இத்த கைய இணைவைத்தலைச் செய்பவர் தவ்பா செய்யாமல் இறந்து விட்டால் நிரந்தர நரகத்தில் வீழ்வார். முஸ்லிம்கள் வாழும் பெரும்பாலான ஊர்களில் பரவலாகக் காணப்படு கின்ற இந்த இணைவைத்தலின் வகைகள் பின்வருமாறு.

## சமாதி வழிபாடு

இறந்து போன அவ்லியாக்கள் தம் தேவைகளை நிறை வேற்றுகின்றனர், கஷ்டங்களையும் துன்பங்களையும் நீக்கு கின்றனர் என்று நம்பி சிலர் அவர்களின் அடக்கஸ்தலம் சென்று அவர்களிடம் உதவி தேடுகின்றனர், பாதுகாப்புத் தேடுகின்றனர். (இவை அல்லாஹ்விடம் மட்டுமே செய்ய வேண் டிய வணங்கங்களாகும்) அல்லாஹ் கூறுகிறான்: உமது இறை வன், 'அவனைத் தவிர வேறெவரையும் நீங்கள் வணங்கா தீர்கள்' என விதித்துள்ளான். (17:23)

அதுபோல இறந்துபோன நபிமார்கள் மற்றும் இதர நல்ல டியார்களிடம் துன்பங்களை நீக்கவும், தங்களுக்கு இறைவ னிடம் பரிந்துரை செய்யவும் வேண்டிப் பிரார்த்திக்கின்றனர். (இதுவும் இணைவைத்தல் ஆகும்) அல்லாஹ் கூறுகிறான்: துன்பத்திற்குள்ளானவர் இறைஞ்சும்போது அவருக்குப் பதில் அளிப்பவன் யார்? மேலும் அவருடைய துன்பத்தை நீக்குப வன் யார்? மேலும் உங்களைப் பூமியில் பிரதிநிதிகளாய்ஆக்கு கிறவன் யார்? (இப்பணிகளைச் செய்ய) அல்லாஹ்வுடன் வேறு கடவுள் உண்டா? நீங்கள் மிகக் குறைவாகவே சிந்திக்கின் றீர்கள்! (27:62)

இன்னும் சிலர் நிற்கும் போதும், உட்காரும் போதும், கீழே விழும் போதும், அல்லது துன்பங்கள், துயரங்களில் மாட்டிக் கொள்ளும் போது தங்களுடைய ஷேக் அல்லது அவ்லியாக் களுடைய பெயரை திக்ராக உச்சரிக்கும் வழக்கமுடையவர் களாக உள்ளனர். யா முஹம்மத், யா அலீ, யா ஹுஸைன், யா முஹ்யுத்தீன், யா ஷாதுலி, யா ரிஃபாஈ என்றெல்லாம் கூறு கின்றனர். மேலும் ஐதரூஸ், சைய்யதலி ஃபாத்திமா போன்றோ ரையும் அழைக்கின்றனர். ஆனால் அல்லாஹ் கூறுகிறான்: அல்லாஹ்வை விடுத்து நீங்கள் எவர்களை அழைக்கின்றீர்

களோ அவர்கள் உங்களைப் போன்ற அடியார்கள் தாம். (7:194)

சமாதிகளை வழிபடக்கூடியவர்களில் சிலர் அவற்றை வலம் வருகின்றனர், அவற்றின் மூலைகளையும், படிக்கட்டு களையும் தொட்டு முத்தமிடுகின்றனர், மேனியில் தடவிக் கொள்கின்றனர். அங்குள்ள மணலை முகத்தில் பூசிக்கொள் கின்றனர். அவற்றுக்கு ஸஜ்தாவும் செய்கின்றனர். மேலும் அவற்றுக்கு முன் தாழ்ந்து, பணிந்து பயபக்தியுடன் நின்று நோய் குணமாகுதல், பிள்ளைப் பேறு கிடைத்தல், தங்களு டைய காரியங்கள் எளிதாகுதல் போன்ற தங்களுடைய நாட் டங்களையும் தேவைகளையும் கேட்கின்றனர்.

சிலபோது அவ்லியாவே! தலைவரே! நான் தொலை தூரத் திலிருந்து வந்திருக்கிறேன் என்னை ஏமாற்றி விடாதீர்கள் என்றும் கூறுகின்றனர். அல்லாஹ் கூறுகிறான்: அல்லாஹ்வை விடுத்து கியாம நாள் வரை தனக்குப் பதிலளிக்க இயலாத வர்களை அழைப்பவர்களை விட மிக வழிகெட்டவர்கள் யார் இருக்க முடியும்? தங்களை அழைப்பதையே அவர்கள் அறியா தவர்களாக இருக்கின்றார்கள். (46:5) அல்லாஹ்வை விடுத்து அவனுக்கு இணையாக ஒருவரைப் பிரார்த்தித்த நிலையில் எவன் இறந்து விடுகிறானோ அவன் நரகில் நுழைவார் என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்ப வர்: இப்னு மஸ்வூத் (ரழி), நூல்: புகாரி

சிலர் சமாதிகளுக்குச் சென்று மொட்டை அடித்துக்கொள் கின்றனர். இன்னும் சிலர் அவ்லியாக்களின் அடக்கஸ்தலங் களை தரிசிப்பது சம்பந்தமாக ‘தர்ஹாக்களை ஹஜ் (?) செய் வது எப்படி?’ என்பது போன்ற தலைப்புகளில் புத்தகங்களே வைத்திருக்கிறார்கள்! (அடக்கஸ்தலங்களை தரிசிப்பது என் னவோ அவர்களுக்கு ஹஜ் செய்வதைப் போல) மற்றும் சிலர், அவ்லியாக்கள் இவ்வுலகை நிர்வகித்துக் கொண்டிருக்கின்

றார்கள். நன்மையோ, தீமையோ செய்ய அவர்களுக்கு ஆற்றல் இருக்கிறது என்று நம்புகிறார்கள். ஆனால் அல்லாஹ் கூறுகிறான்: அல்லாஹ் உமக்கு ஏதேனும் துன்பத்தைக் கொடுத்தால் அதனை அகற்றுபவர் அவனைத் தவிர வேறு யாரும் இல்லை. அவன் உமக்கு ஏதேனும் நன்மை அளிக்க நாடினால் அவனது அருளைத் தடுப்பவர் யாருமில்லை. (10:107)

## அல்லாஹ் அல்லாதவருக்கு நேர்ச்சை செய்தலும் அறுத்துப் பலியிடுதலும்

அல்லாஹ் அல்லாதவருக்கு நேர்ச்சை செய்வதும் இணை வைத்தலாகும்- சிலர் சமாதிகளுக்கு விளக்கேற்ற நேர்ந்து கொள்வதைப் போல. அதுபோல அல்லாஹ் அல்லாதவர்களுக்காக அறுத்துப் பலியிடுவதும் மிகப் பெரும் இணைவைத்தலைச் சேர்ந்ததாகும். அல்லாஹ் கூறுகிறான்: (நபியே!) நீர் உமது இறைவனுக்காகத் தொழுவீராக! மேலும் (இறைவனுக்காகவே) அறுத்துப் பலியிடுவீராக! (108:2)

அல்லாஹ் அல்லாதவருக்காக அறுத்துப் பலியிட்டவனை அல்லாஹ் சபிப்பானாக என்பது நபிமொழி.

அறிவிப்பவர்: அலீ (ரழி), (முஸ்லிம்)

அல்லாஹ் அல்லாதவருக்காக அறுத்துப் பலியிடும் போது சில சமயம் ஹராமான இரண்டு காரியங்கள் ஒரே நேரத்தில் நடந்துவிடும். அவை ஒன்று, அல்லாஹ் அல்லாதவருக்காக அறுப்பது. மற்றொருண்டு அல்லாஹ் அல்லாதவரின் பெயர் கூறி அறுப்பது. இவ்விரண்டு முறையில் அறுத்தாலும் அதைப் புசிப்பது ஹராமே. அறியாமைக்காலத்து பலியிடுதல் சில நமது காலத்தில் பரவலாக உள்ளது. அது தான் ஜின்களுக்காக அறுத்துப் பலியிடுவதாகும். அதாவது ஒரு வீட்டை வாங்கினால் அல்லது புதிதாக ஒரு வீடு கட்டினால் அல்லது ஒரு கிணறு தோண்டினால் ஜின்களின் தொல்லைகளுக்குப்

பயந்து அவ்விடத்திலோ அல்லது அதன் படிக்கட்டிலோ ஒரு பிராணியைப் பலியிடுவார்கள். இதுவும் மிகப் பெரிய இணை வைத்தலாகும்.

## ஹராமை ஹலாலாகவும் ஹலாலை ஹராமாகவும் ஆக்குதல்

இன்று பரவலாகக் காணப்படக்கூடிய மிகப் பெரும் இணை வைத்தலுக்கு மற்றொரு உதாரணம் அல்லாஹ் ஹராமாக்கியவற்றை ஹலாலாகவும் அல்லாஹ் ஹலாலாக்கியவற்றை ஹராமாகவும் ஆக்குவது. அல்லது ஹலால், ஹராம் ஆக்குகின்ற இந்த உரிமை அல்லாஹ்வை விடுத்து மற்றவருக்கும் இருக்கிறது என்று நம்புவது. அல்லது அஞ்ஞான காலத்தின் அடிப்படையிலான நீதிமன்றங்களையும் சட்டங்களையும் நாடிச் சென்று முழு திருப்தியுடனும் விருப்பத்துடனும் வழக்குத் தொடுப்பது, அது ஹலால்-ஆகுமானது என்று கருதுவது. இதனை அல்லாஹ் மிகப் பெரும் குஃப்ர்- இறைநிராகரிப்பு என பின்வரும் வசனத்தில் கூறியுள்ளான்:

அவர்கள் அல்லாஹ்வை விடுத்து தங்கள் பாதிரிகளையும் துறவிகளையும் கடவுளராக ஆக்கிக் கொண்டார்கள். (9:31)

(முன்பு கிறிஸ்தவராக இருந்த) அதிய்யுப்னு ஹாதிம் (ரழி) இந்த வசனத்தை நபி (ஸல்) அவர்கள் ஓதிடக் கேட்ட போது அந்த மக்கள் அவர்களை (பாதிரிகளையும் துறவிகளையும்) வணங்கிக்கொண்டிருக்கவில்லையே எனக் கூறினார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், சரிதான்! ஆனால் அந்த பாதிரிகளும் துறவிகளும் அல்லாஹ் ஹராமாக்கியவற்றை ஹலால் என்றும், அல்லாஹ் ஹலாலாக்கியவற்றை ஹராம் என்றும் கூறும்போது அவர்களும் அவ்வாறு ஏற்றுக் கொண்டார்களே! அது தான் அவர்களை அவர்கள் வணங்குவதாகும். (திர்மிதி, பைஹகி)

**மேலும் இணைவைப்பவர்களைப் பற்றி அல்லாஹ் குறிப்பி டும்போது, 'அவர்கள் அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் விலக்கியவற்றை விலக்கப்பட்டவை என்று கருதாமலும் சத் திய மார்க்கத்தைப் பின்பற்றாமலும் இருக்கின்றார்கள்.....' (9:29) என்று கூறியுள்ளான். மேலும் அல்லாஹ் கூறுகிறான்: (நபியே! இவர்களிடம்) நீர் கேளும்: நீங்கள் எப்போதாவது யோசித்துப் பார்த்திருக்கின்றீர்களா? அல்லாஹ் உங்களுக்கு இறக்கியருளிய ரிஸ்கில் (வாழ்வாதாரத்தில்) சிலவற்றை விலக் கப்பட்டவை என்றும், வேறு சிலவற்றை ஆகுமாக்கப்பட்டவை என்றும் ஏற்படுத்திக் கொண்டீர்களே! (நபியே! இவர்களிடம்) கேளுங்கள் 'இதற்கு அல்லாஹ் உங்களுக்கு அனுமதியளித் திருந்தானா? அல்லது நீங்கள் அல்லாஹ்வின் மீது புனைந் துரைக்கின்றீர்களா?' (10:59)**

## சூனியம், ஜோதிடம், குறி பார்த்தல்

பரவலாகக் காணப்படக்கூடிய ஷிர்க்கின் வகைகளில் சூனியம், ஜோதிடம், குறிபார்த்தல் ஆகியவையும் அடங்கும்.

சூனியம் செய்வது குஃப்ர் எனும் இறைநிராகரிப்பாகும். நாசத்தைத் தரக்கூடிய ஏழு பெரும் பாவங்களில் ஒன்றாகும். அதில் தீமை இருக்கிறதே தவிர நன்மையில்லை. சூனியத் தைக் கற்றுக் கொள்வதைப் பற்றி அல்லாஹ் கூறுகிறான்: **(உண்மையில்) தங்களுக்கு தீங்கிழைப்பதையும் எவ்வித நன் மையும் தராததையுமே கற்றுக் கொண்டார்கள். (2:102)**

மேலும் கூறுகிறான்: **சூனியக்காரன் எங்கு சென்றாலும் (ஒரு போதும்) வெற்றி பெறமாட்டான். (20:69)** சூனியம் பார்க் கச் செல்பவன் காஃபிராவான். அல்லாஹ் கூறுகிறான்: **அவர் கள் சுலைமானுடைய ஆட்சியின்போது ஷைத்தான்கள் ஓதிய வற்றையே பின்பற்றினார்கள். ஆனால் சுலைமான் ஒரு போதும் நிராகரிப்பவர்-காஃபிர் அல்லர். ஷைத்தான்கள் தாம் நிராகரிப்**

பவர்கள். அவர்கள் தாம் மனிதர்களுக்கு சூனியத்தைக் கற்றுக்கொடுத்தார்கள். மேலும் பாபிலோனில் ஹாரூத் மாரூத் என்ற இரு வானவர்களுக்கும் இறக்கிவைக்கப்பட்டதையும் அவர்கள் பின்பற்றினார்கள். ஆனால் அவ்விருவரும் நிச்சய மாக நாங்கள் சோதனையாக இருக்கிறோம். (இதைக் கற்று) நீங்கள் காஃபிர்களாகி விடாதீர்கள் என்று கூறி எச்சரிக்காத வரையில் எவருக்கும் அந்த சூனியத்தைக் கற்றுக் கொடுக்க வில்லை. (2:102)

சூனியக்காரன் பற்றிய சட்ட நிலை, அவனைக் கொலை செய்ய வேண்டும். அவனுடைய சம்பாத்தியம் விலக்கப்பட் டது, மோசமானது என்பதாகும். அறிவீனர்களும் அக்கிரமக் காரர்களும் பலவீன மான ஈமான் உடையவர் களும் சிலரின் மீது வரம்பு மீறுவதற்காக அல்லது அவர்களைப் பழிவாங்கு வதற்காக சூனியம் செய்ய சூனியக்காரர்களிடம் செல்கின் றார்கள்.

மேலும் மக்களில் இப்படியும் சிலர் இருக்கின்றார்கள். அவர் கள் சூனியத்தை எடுப்பதற்காக சூனியக்காரர்களிடம் செல்வ தன் மூலம் ஹராமான செயலைச் செய்கிறார்கள். இத்தகை யவர்கள் மீது கடமை என்னவெனில் அவர்கள் அல்லாஹ் வின் பக்கம் திரும்பி ஸூரத்துல் இக்லாஸ், ஸூரத்துல் ஃபலக், ஸூரத்துந் நாஸ் போன்ற அவனுடைய வார்த்தைகள் மூலம் நிவாரணம் தேட வேண்டும்.

மறைவான விஷயங்களை அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் அறிய மாட்டார்கள். இப்படியிருக்க ஜோதிடம் பார்ப்ப வன், குறி பார்ப்பவன் ஆகிய இருவரும் மறைவான விஷயங் களைத் தாம் அறிவதாக வாதிட்டால் அவ்விருவரும் மகத்து வமிக்க அல்லாஹ்வை நிராகரிப்பவர்களாவர். இவர்களில் பெரும்பாலோர் பணம் பறிப்பதற்காக அப்பாவி மக்களை ஏமாற்றுகின்றனர். இதற்காக அவர்கள் மணலில் கோடு கிழித்

துப் பார்ப்பது, சோழி போட்டுப் பார்ப்பது, கைரேகை பார்ப்பது, பீங்கானில் நீர் ஊற்றி பார்ப்பது, கண்ணாடியில் பார்ப்பது போன்ற பல்வேறு வழிமுறைகளைக் கையாளுகின்றனர்.

இவர்கள் ஒரு முறை உண்மை கூறினால் 99 முறை பொய் கூறுவார்கள். கற்பனைகளை அள்ளி வீசக்கூடிய இவர்கள் கூறுவது எந்த ஒரு தடவை உண்மையாகிறதோ அதை மட்டும் இந்த அப்பாவி மக்கள் நினைத்துக் கொண்டிருக் கிறார்கள். அதனால் எதிர்காலத்தை அறிந்து கொள்வதற் காகவும், திருமணம், வியாபாரம் போன்ற காரியங்களில் நன்மை, தீமையை அறிந்துகொள்வதற்காகவும், காணாமல் போன பொருட்களை கண்டுபிடிப்பதற்காகவும் அவர்களிடம் செல்கின்றனர்.

இப்படி எதிர்காலத்தைக் கணித்துச் சொல்பவர்களிடம் சென்று அவர்கள் கூறுவதை ஒருவன் நம்பினால் அவன் காஃபிராவான். இஸ்லாத்தை விட்டும் வெளியேறியவனாவான். ஆதாரம்: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியுள்ளார்கள்: எவன் ஜோதிடன் அல்லது குறிகாரனிடம் சென்று அவன் சொல் வதை நம்புகிறானோ அவன் முஹம்மதுக்கு இறக்கியருளப் பட்ட (வேதத்)தை நிராகரித்தவனாவான். (அஹ்மத்)

ஆனால் அவர்களிடம் செல்பவன் மறைவானவற்றை அவர் கள் அறிவார்கள் என நம்பாமல் என்ன சொல்கிறார்கள் என்று பரிசோதிப்பதற்காகச் செல்வானாயின் அவன் காஃபிராக மாட் டான். மாறாக அவனது நாற்பது நாட்களின் தொழுகை ஏற் றுக்கொள்ளப்பட மாட்டாது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர் கள் கூறினார்கள்: யார் ஜோசியக்காரனிடம் சென்று எதை யேனும் கேட்டால் அவரது நாற்பது நாட்களின் தொழுகை ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது. (முஸ்லிம்)

ஆயினும் அவனுடைய தொழுகை ஏற்றுக் கொள்ளப்படா விட்டாலும் நாற்பது நாட்கள் அவன் தொழுவதும் இப்பாவத் வத்திற்காக தவ்பா செய்வதும் அவன் மீது கடமையாகும்.

## நட்சத்திரங்களின் மீது நம்பிக்கை வைத்தல்

**அதாவது சம்பவங்களிலும் மனிதர்களின் வாழ்விலும் நட்சத்திரங்களின் தாக்கம் இருப்பதாக நம்புவது. இதுவும் ஷிர்க் காகும்.**

**ஸைத் பின் ஹாலித் (ரழி) அறிவிப்பதாவது: ஹுதைபிய்யா எனும் இடத்தில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களுக்கு சுப்ஹு தொழுகை நடத்தினார்கள். இரவு மழை பெய்திருந்தது. தொழுது முடித்ததும் மக்களை முன்னோக்கி, உங்கள் இறைவன் என்ன கூறினான் தெரியுமா? என வினவினார்கள். அதற்கு, அல்லாஹ்வும் அவன் தூதருமே நன்கறிந்தவர்கள்! எனத் தோழர்கள் கூறினர். பிறகு, 'என்னுடைய அடியார்களில் என்னை நம்புபவர்களும் என்னை மறுப்பவர்களும் இருக்கின்றார்கள். அல்லாஹ்வின் அருளாலும் அவனுடைய கருணையாலும் தான் எங்களுக்கு மழை பொழிந்தது எனக் கூறியவர் என்னை நம்பியவரும் நட்சத்திரத்தை நிராகரித்தவரும் ஆவார். இன்னின்ன நட்சத்திரங்களால் தான் எங்களுக்கு மழை பொழிந்தது எனக் கூறியவர் என்னை நிராகரித்தவரும் நட்சத்திரத்தை ஏற்றுக் கொண்டவரும் ஆவார்' என இறைவன் கூறினான் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். (புகாரி)**

பத்திரிக்கைகளில் வரக்கூடிய ராசிபலன்களில் நம்பிக்கை வைப்பதும் இந்த வகையைச் சேர்ந்தது தான். அதிலுள்ள நட்சத்திர மற்றும் வானசாஸ்திரங்களை ஒருவன் நம்பினால் அவனும் இணைவைத்தவனாவான். ராசிபலனை ஒருவன் ஆறுதலுக்காகப் படித்தால், அவன் பாவியாவான். ஏனெனில் ஷிர்க்கான விஷயங்களைப் படித்து ஆறுதலடைவது கூடாததாகும். இன்னும் சொல்வதானால் சில வேளை ஷைத்தான் அவனுடைய உள்ளத்தில் ராசிபலனைப் பற்றிய நம்பிக்கையை

விதைத்து விடுவான். பிறகு அது ஷிர்க்கில் வீழ்வதற்கு சாதன மாக அமைந்து விடும்.

## அல்லாஹ் பலனை ஏற்படுத்தாத பொருட்களில் பலன் இருப்பதாக நம்புதல்

இதுவும் ஷிர்க்காகும். உதாரணமாக சிலர் ஜோதிடர் அல் லது சூனியக்காரனின் ஆலோசனையின் பேரில் அல்லது முன் னோர்களின் வழக்கத்தின் அடிப்படையில் கயிறு, உலோக வளையம், சிப்பி, தாயத்து, தகடு போன்றவற்றில் பலன் இருப் பதாக நம்புகிறார்கள். அதனால் கண் திஷ்டிக்காகவும், துன் பம் நீங்குவதற்காகவும் அது வராமல் தடுப்பதற்காகவும் அவற்றை தங்களுடைய மற்றும் தங்கள் குழந்தைகளுடைய கழுத்துக்களிலோ அல்லது உடலில் வேறு எங்கேனும் கட்டிக் கொள்கிறார்கள். அல்லது தங்கள் வீடுகளில், வாகனங்க ளில் மாட்டிக் கொள்கிறார்கள். மேலும் இதே நோக்கத்திற் காக பலவகையான கற்கள் பதித்த மோதிரங்களையும் அணி கின்றார்கள். இவையனைத்தும் சந்தேகமில்லாமல் அல்லாஹ் வின் மீது தவக்குல் - நம்பிக்கை வைப்பதற்கு எதிரானவை யாகும். இவை மனிதனுக்கு பலவீனத்தையே அதிகப்படுத் தும். மட்டுமல்ல ஹராமானவற்றைக் கொண்டு மருத்துவம் செய்வதைச் சார்ந்தவையாகும் இவை.

இத்தகைய தாயத்து, தகடுகளில் பெரும்பாலானவற்றில் வெளிப்படையான ஷிர்க்கான வாசகங்களும் சில ஜின், ஷைத் தான்களிடம் பாதுகாப்பு தேடும்படியான வாசகங்களுமே உள்ளன. அல்லது புரியாத வரைபடங்கள் அல்லது விளங்க முடியாத எழுத்துக்களே இருக்கின்றன. ஓதிப்பார்க்கின்ற சிலர் தாயத்து தகடுகளில் குர்ஆன் வசனங்களோடு ஷிர்க் கான வாசகங்களையும் சேர்த்து எழுதுகின்றனர். இன்னும் சிலரோ திருக்குர்ஆன் வசனங்களை சிறுநீர், மாதவிடாய்

**இரத்தம் போன்ற அசுத்தங்களின் மூலம் எழுதுகின்றனர். ஆக மேற்குறிப்பிட்ட அனைத்தையும் தொங்கவிட்டுக் கொள் வது அல்லது கட்டிக் கொள்வது ஹராமாகும். யார் தாயத் தைக் கட்டித் தொங்கவிட்டுக் கொள்கிறாரோ திண்ணமாக அவர் இணைவைத்து விட்டார் என்பது நபிமொழி. அறிவிப் பவர்: உக்பா பின் ஆமிர் (ரழி), நூல்: அஹ்மத்**

**இவ்வாறு செய்பவன்- அல்லாஹ்வை விடுத்து இந்த தாயத்து தகடுகளும் நன்மை, தீமை அளிக்கக்கூடியவை என நம்பினால் அவன் இணைவைத்தவன் ஆவான். மிகப் பெரும் ஷிர்க்கைச் செய்து விட்டவனாவான். நன்மை, தீமை அளிப்ப தற்கு இவையும் ஒரு காரணம் என நம்பினால் (அல்லாஹ் அப் படி எற்படுத்தவில்லை என்பது தனி விஷயம்) அவன் சிறிய இணை வைப்பைச் செய்து விட்டவனாவான். இது காரண காரியங்க ளில் இணைவைத்தல் என்பதில் அடங்கும்.**

## வழிபாடுகளில் முகஸ்துதி

**நற்செயல்கள் ஏற்றுக்கொள்ளப்பட வேண்டுமாயின் அவை முகஸ்துதியை விட்டும் நீங்கி அல்லாஹ்வுக்காக என தூய எண்ணத்துடனும் நபிவழியைப் பின்பற்றியும் செய்யப்பட்டி ருக்க வேண்டும். மக்கள் பார்க்க வேண்டும் மெச்ச வேண்டும் என்பதற்காக எவன் வழிபாடு செய்கிறானோ அவன் சிறிய இணைவைப்பைச் செய்தவன் ஆவான். அவனுடைய செயல் அழிந்துவிடும். உதாரணமாக மக்கள் பார்க்க வேண்டும் என்ப தற்காக ஒருவன் தொழுவதைப் போல.**

**அல்லாஹ் கூறுகிறான்: இந்நயவஞ்சகர்கள் அல்லாஹ்வை ஏமாற்றுகின்றார்கள். (உண்மையில்) அவனே இவர்களை ஏமாற் றத்திற்குள்ளாக்கி இருக்கின்றான். இவர்கள் தொழுகைக்காக எழுந்து நின்றால் சோம்பல்பட்டவர்களாகவே நிற்கிறார்கள். மக்களுக்குக் காட்டிக்கொள்ளவே தொழுகிறார்கள். இன்னும்**

அல்லாஹ்வை மிகக் குறைவாகவே நினைவு கூருகிறார்கள். (4:142)

இதுபோலவே ஒருவன் மக்களிடம் பிரபலமாக வேண்டும் என்பதற்காக ஒரு நற்செயலைச் செய்தால் அவன் ஷிர்க்கில் வீழ்வான். இப்படிச் செய்பவனுக்கு நபிமொழியில் எச்சரிக்கை வந்துள்ளது. நபி(ஸல்)கூறினார்கள்: மக்கள் கேட்க வேண்டுமென்பதற்காக ஒருவன் ஒரு செயலைச் செய்தால் அல்லாஹ் அதனை (அவர்கள்) கேட்கும்படிச் செய்து விடுவான். மக்கள் பார்க்க வேண்டுமென்பதற்காக ஒருவன் ஒரு செயலைச் செய் தால் அல்லாஹ் அதனை (அவர்கள்) பார்க்கும்படிச் செய்திடு வான். (மறுமையில் அதற்குக் கூலி கிடைக்காது) அறிவிப்பவர்: இப்னு அப்பாஸ் (ரழி), நூல்: முஸ்லிம்

அல்லாஹ்வையும் மக்களையும் நாடி ஒருவன் ஒரு செய லைச் செய்தால் அவனது செயல் அழிந்துவிடும். ஹதீஸ் குது ஸியில் வந்துள்ளதாவது: இணையாளர்களின் இணைவைப் பை விட்டும் நான் தேவையற்றவன், என்னுடன் மற்றவர்களை இணையாக்கி ஒருவன் ஒரு செயலைச் செய்தால் (அதற்காக கூலி ஏதும் வழங்காமல்) அவனையும் அவனது இணைவைப் புச் செயலையும் நான் விட்டு விடுவேன் என அல்லாஹ் கூறுவ தாக நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அபூஹு ரைரா (ரழி), நூல்: முஸ்லிம்

ஒருவன் அல்லாஹ்வுக்காக என தூய எண்ணத்துடன் ஒரு செயலைச் செய்ய ஆரம்பிக்கின்றான் பிறகு திடீரென அவ னுள் முகஸ்துதி தோன்றிவிடுகிறது எனில் அவன் அந்த முகஸ் துதியை வெறுத்து அது நீங்க கடுமையாகப் போராடினால் அவனது செயல் சரியானதாக ஆகிவிடும். ஆனால் அவனுள் ஏற்பட்ட அந்த முகஸ்துதியை அவன் திருப்தி கொண்டால், அதிலே அவனது உள்ளம் சாந்தியடைந்தால் பெரும்பாலான அறிஞர்களின் கூற்றுப் படி அவனுடைய செயல் வீணாகி விடும்.

## துற்குறி

துற்குறி என்பது அபசகுனமாகும். அல்லாஹ் கூறுகிறான்: அவர்களுக்கு ஒரு நன்மை வந்துவிட்டால் இது எங்களுக்கு வர வேண்டியது தான் என்று கூறுவார்கள். அவர்களுக்கு ஏதேனும் துன்பம் நேர்ந்து விட்டாலோ மூஸாவையும் அவர்களுடன் உள்ளவர்களையும் (தமக்கு நேர்ந்த) அபசகுனமாகக் கருதுவார்கள். (7:131)

அரபுகள் பயணம் மேற்கொள்ள அல்லது வேறு ஏதேனும் ஒரு காரியத்தைச் செய்ய நாடினால் ஒரு பறவையைப் பிடித்து பறக்க விடுவார்கள். அது வலது பக்கமாகப் பறந்தால் அதை நற்குறியாகக் கருதி அந்தக் காரியத்தைச் செய்ய ஆரம்பிப்பார்கள். அது இடது பக்கமாகப் பறந்தால் அதைத் துற்குறியாக - அபசகுனமாகக் கருதி செய்ய நினைத்த காரியத்தை விட்டு விடுவார்கள். இவ்வாறு செய்வதன் சட்ட நிலையை நபி (ஸல்) அவர்கள் பின்வரும் நபிமொழியில் தெளிவுபடுத்தியுள்ளார்கள். 'சகுனம் பார்ப்பது ஷிர்க்காகும்.' அறிவிப்பவர்: இப்னு மஸ்வூத் (ரழி), நூல்: திர்மிதி, அபூதாவூத்

தடுக்கப்பட்டதும் தவ்ஹீதின் நிறைநிலைக்கு எதிரானதுமான இத்தகைய நம்பிக்கையில் பின்வருபவையும் அடங்கும்: சில மாதங்களையும் சில நாட்களையும் பீடையாகக் கருதுவது. உதாரணமாக ஸபர் மாதத்தில் திருமணம் போன்ற நல்ல காரியங்களைத் தவிர்த்தல், ஒவ்வொரு மாதத்திலும் கடைசிப் புதன் நீடித்த துர்ப்பாக்கியத்திற்குரிய நாள் என்று நம்புதல். அதுபோல சில எண்களை (உதாரணமாக 9, 13, 103), சில பெயர்களை அல்லது சில நபர்களை அபசகுனமாகக் கருதுவது. உதாரணமாக ஒருவர் தனது கடையைத் திறக்கச் செல்லும்போது வழியில் ஒரு குருடரைக் கண்டால் அவரைத் துற்குறியாகக் கருதி திரும்பி விடுதல். ஆக இப்படிப்பட்ட அனைத்து நம்பிக்கைகளும் ஹராமான, ஷிர்க்கான

காரியங்களாகும். இவ்வாறு செய்வோரை விட்டும் நபி (ஸல்) அவர்கள் விலகிக் கொண்டனர்.

இம்ரான் பின் ஹுஸைன் (ரழி) அறிவிக்கிறார்கள்: ஒருவர் சகுனம் பார்ப்பாரெனில் அல்லது அவருக்காக சகுனம் பார்க் கப்படுகிறதெனில், ஒருவர் ஜோசியம் பார்ப்பாரெனில் அல்லது அவருக்காக ஜோசியம் பார்க்கப்படுகிறதெனில், ஒருவர் சூனி யம் செய்தாரெனில் அல்லது அவர் சார்பாக சூனியம் செய்யப் படுகிறதெனில் இப்படிப்பட்டவர்கள் நம்மைச் சேர்ந்தோர் அல்லர் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (தப்ரானி)

இந்தச் செயல்களில் ஒன்றை யாரேனும் செய்துவிட்டால் பின்வரும் ஹதீஸில் வந்துள்ளது போல அதற்குப் பரிகாரம் செய்ய வேண்டும்.

ஒருவர் சகுனம் பார்த்து தான் நாடிய காரியத்தைச் செய் யாது பின்வாங்கினால் அவர் அல்லாஹ்வுக்கு இணைவைத்து விட்டார் என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதும் அல்லாஹ்வின் தூதரே! அதற்குப் பரிகாரம் என்ன? எனத் தோழர்கள் வினவினர். அதற்குப் பரிகாரம், 'அல்லாஹும்ம லா கைர இல்லா கைருக வலா தைர இல்லா தைருக வலா இலாஹ கைருக'

اَللّٰهُمَّ لاَ خَيْرَ اِلاَّ خَيْرُكَ وَلاَ طَيْرَ اِلاَّ طَيْرُكَ وَلاَ اِلٰهَ غَيْرُكَ

என்று கூறுவதாகும் என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறினார் கள். அறிவிப்பவர்: அப்துல்லாஹ் இப்னு அம்ர் (ரழி), (அஹ்மத்)

(பொருள்: இறைவா! நீ வழங்கும் நன்மையைத் தவிர வேறு எதுவும் நன்மையாக இருக்க முடியாது. நீ ஏற்படுத்தும் சகுனத்தைத் தவிர வேறு எதுவும் தீய சகுனமாக இருக்க முடியாது. வணக்கத்திற்குரிய இறைவன் உன்னைத் தவிர வேறு யாரும் இருக்க முடியாது.)

துற்சகுனம் பார்ப்பது மனிதர்களின் இயல்பாகும். அது அதிகரிக்கவும் செய்யும், குறையவும் செய்யும். இதற்குரிய முக்கியமான சிகிச்சையாவது தவக்குல்- அல்லாஹ்வையே முழுவதுஞ் சார்ந்திருத்தல் எனும் பண்பாகும். இப்னு மஸ்வூத் (ரழி) அவர்கள் கூறியது போல: நம்மில் எவருக்கும் இத்தகைய எண்ணம் ஏற்படாமலில்லை. எனினும் தவக்குல்- அல்லாஹ்வையே முழுவதுஞ் சார்ந்திருப்பதன் மூலம் அல்லாஹ் அதனைப் போக்கி விடுகிறான். (அபூதாவூத்)

## அல்லாஹ் அல்லாதவற்றின் மீது சத்தியம் செய்தல்

அல்லாஹ் தன்னுடைய படைப்பினங்களில் தான் நாடியதைக் கொண்டு சத்தியம் செய்கிறான். ஆனால் மனிதர்களைப் பொருத்தவரையில் அல்லாஹ்வை விடுத்து மற்றவற்றைக் கொண்டு சத்தியம் செய்வது கூடாது. என்றாலும் பெரும்பாலான மக்களுடைய பேச்சுகளில் அல்லாஹ் அல்லாததைக் கொண்டு சத்தியம் செய்யும் வழக்கம் இருந்து வருகின்றது. எந்த மகத்துவம் அல்லாஹ்வுக்கே தவிர வேறு எவருக்கும் பொருந்தாதோ அத்தகைய மகத்துவம் சத்தியத்தில் உள்ளது.

இப்னு உமர் (ரழி) அறிவிப்பதாவது: அறிந்து கொள்ளுங்கள்: நீங்கள் உங்களுடைய தந்தையர் மீது சத்தியம் செய்வதை திண்ணமாக அல்லாஹ் தடை செய்திருக்கிறான். (உங்களில்) யாரேனும் சத்தியம் செய்வதாக இருந்தால் அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்யட்டும். இல்லையென்றால் மௌனமாக இருக்கட்டும் என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். (புகாரி) இப்னு உமர் (ரழி) மேலும் அறிவிப்பதாவது: அல்லாஹ் அல்லாதவற்றின் மீது யார் சத்தியம் செய்கிறாரோ அவர் இணைவைத்து விட்டார். என அல்லாஹ்வின்

தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். (அஹ்மத்) அடைக்கலப் பொருளின் மீது யார் சத்தியம் செய்கிறாரோ அவர் நம்மைச் சார்ந்தவரல்ல எனவும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: புரைதா (ரழி), நூல்: அபூதாவூத்

எனவே கஅபா, அடைக்கலப் பொருள், உதவி, கண்ணியம், இன்னாருடைய பரகத், இன்னாருடைய வாழ்வு, நபியின் அந்தஸ்து, அவ்லியாக்களுடைய அந்தஸ்து, தாய், தந்தை, குழந்தைகள் இன்னும் இது போன்றவற்றின் மீது சத்தியம் செய்வது ஹராமாகும். யாரேனும் இவ்வாறு செய்து விட்டால் அதற்கான பரிகாரம் ஆதாரப்பூர்வமான நபிமொழியில் வந்துள்ளது போல 'லா இலாஹ இல்லல்லாஹ்' என்று கூறுவதாகும். 'உங்களில் ஒருவர் சத்தியம் செய்யும் போது லாத், உஸ்ஸாவின் மீது சத்தியமாக (நமது நாடுகளில் முஹ்யுத்தீன் ஆண்டவர், ஷாஹுல் ஹமீது ஆண்டவர் மீது சத்தியமாக என்று கூறுவது போல) என்று கூறினால் அவர் 'லா இலாஹ இல்லல்லாஹ் என்று கூறட்டும்' என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரழி), (புகாரி)

இதே அடிப்படையில் இன்னும் பல ஹராமான, ஷிர்க்கான வார்த்தைகள் உள்ளன. சில முஸ்லிம்கள் அவற்றைக் கூறி வருகின்றனர். உதாரணமாக அல்லாஹ்வைக் கொண்டும் உன்னைக் கொண்டும் பாதுகாப்புத் தேடுகிறேன், அல்லாஹ்வின் மீதும் உன் மீதும் நான் அசைக்க முடியாத நம்பிக்கை வைத்துள்ளேன், இது அல்லாஹ்வினாலும் உன்னாலும் தான் கிடைத்தது, அல்லாஹ்வையும் உன்னையும் தவிர எனக்கு வேறு யார் இருக்கிறார், எனக்காக வானத்தில் அல்லாஹ்வும் பூமியில் நீயும் இருக்கின்றாய், அல்லாஹ்வும் இன்னாரும் இல்லையென்றால், இஸ்லாத்திற்கும் எனக்கும் எந்த சம்பந்தமும் இல்லை, காலத்தின் கோலமே! - இன்னும் இதுபோன்ற காலத்தைத் திட்டும்படியான வாசகங்கள். உதாரணமாக

கெட்ட காலம், நேரம் கெட்ட நேரம், காலத்தின் சூழ்ச்சி போன்ற வாசகங்கள். ஏனெனில் காலத்தைத் திட்டுவது அதனைப் படைத்த இறைவனைத் திட்டுவது போலாகும்-இயற்கையின் நாட்டம், படைப்பினங்களின் பெயருடன் அப்து என்ற வார்த்தையச் சேர்த்து கூறப்பட்ட பெயர்கள் - உதாரணமாக அப்துல் மஸீஹ், அப்துன் நபி, அப்துர் ரசூல், அப்துல் ஹுஸைன். (அப்து என்பதன் பொருள் அடிமை ஆகும். அப்து என்பதை அல்லாஹ்வின் பெயர்களுடன் மட்டுமே சேர்க்க வேண்டும்.)

இதுபோல தவ்ஹீதுக்கு எதிரான நவீன சில வாசகங்களும், சொல் வழக்குகளும் உள்ளன. இஸ்லாமிய சோஸலிஸம், இஸ்லாமிய ஜனநாயகம், மக்கள் தீர்ப்பே மகேசன் தீர்ப்பு, மதம் இறைவனுக்குரியது, நாடு மக்களுக்கு உரியது, மொழி, இன வாதம், புரட்சி வாதம்.

மலிகுல் முலூக் (அரசர்களுக்கெல்லாம் அரசர்), காழியுல் குழாத் (நீதிபதிகளுக்கெல்லாம் நீதிபதி) என்ற வார்த்தைகளையும் இந்த அர்த்தத்திலுள்ள வார்த்தைகளையும் ஒரு மனிதருக்குச் சொல்வதும், அதுபோல ஸய்யித் (தலைவர், எஜமான்) என்ற வார்த்தையையும் அதே அர்த்தத்திலுள்ள வேறு வார்த்தைகளையும்- அது எந்த மொழியிலிருந்தாலும் சரி நவஞ்சகனுக்கும் காஃபிருக்கும் சொல்வதும் இப்படியாகி விட்டதே! அப்படியாகி விட்டதே! இப்படி இருந்திருக்கக் கூடாதா?! அப்படி இருந்திருக்கக் கூடாதா?! இவ்வாறு இருந்திருந்தால், அப்படி இருந்திருந்தால், இப்படி நடந்திருந்தால், அப்படி நடந்திருந்தால் என்பன போன்ற அதிருப்தி, வருத்தம், கை சேதம் போன்ற அர்த்தங்களைத் தரக்கூடிய-ஷைத்தானியச் செயலுக்கு வழி திறந்து விடக் கூடிய வார்த்தைகளைப் பயன்படுத்துவதும், இறைவா! நீ விரும்பினால் என்னை மன்னிப்பாயாக! என்று கூறுவதும் விலக்கப்பட்டவையாகும்.

## நயவஞ்சகர்கள், தீயவர்களிடம் அமர்தல்

**அதாவது நயவஞ்சகர்கள் மற்றும் தீயவர்களிடம் அமர்தல் என்பது மகிழ்வுடன் அல்லது அவர்களுக்கு மகிழ்வூட்டுவதற் காகவாகும்.**

**உறுதியான ஈமான் இல்லாத பெரும்பாலோர் கெட்டவர்க ளுடன், தீயவர்களுடன் அமர்ந்து கலந்துறவாட விரும்புகிறார் கள். ஏன் அல்லாஹ்வின் மார்க்கத்தையும் அதைப் பின்பற்றி நடக்கக்கூடியவர்களையும் குறை கூறக்கூடியவர்களுடனும், கேலி செய்யக்கூடியவர்களுடனும் கலந்துரவாடுகின்றனர். இத்தகைய செயல் சந்தேகமில்லாமல் விலக்கப்பட்டதும் ஈமானை மாசுபடுத்தக்கூடியதும் ஆகும்.**

**அல்லாஹ் கூறுகிறான்: (நபியே!) நம் வசனங்கள் பற்றிக் குறை கூறிக் கொண்டிருப்போரை நீர் கண்டால் அவர்கள் அதனை விட்டு வேறு பேச்சில் ஈடுபடும் வரை நீர் அவர்களை விட்டும் ஒதுங்கிவிடும். மேலும் எப்பொழுதேனும் ஷைத்தான் உம்மை மறதியில் ஆழ்த்தி விட்டால் அத்தவறை உணர்ந்து கொண்ட பிறகு அக்கிரமம் செய்யும் இக்கூட்டத்தாரோடு நீர் உட்காராதீர். (6:68)**

**இந்நிலையில் அவர்களுடன் அமர்வது கூடாது. அவர்கள் நெருங்கிய உறவினர்களாக இருந்தாலும் சரியே. அல்லது அவர்களுடைய பழக்கவழக்கங்கள் மென்மையாகவும் பேச் சுக்கள் இனிமையாகவும் இருந்தாலும் சரியே. ஆனால் அவர் களை சரியான மார்க்கத்தின் பால் அழைக்கவும் அவர்களின் தவறான கொள்கைக்கு மறுப்புக் கொடுக்கவும் எவர்கள் விரும்புகிறாகளோ அவர்களைத் தவிர. அத்தகையவர்கள் அவர்களுடன் அமர்வது கூடும். ஆயினும் அப்படி அவர்களுடன் அமர்ந்து அவர்களுடைய போக்கை விரும்புவதோ அல்லது வாய் மூடி மௌனமாக இருப்பதோ கூடாததாகும். அல்லாஹ்**

கூறுகிறான்: நீங்கள் அவர்கள் மீது திருப்தி கொண்டாலும் அல்லாஹ் பாவிகளான இத்தகைய மக்கள் மீது (ஒரு போதும்) திருப்தி கொள்ளமாட்டான். (9:96)

## தொழுகையில் அமைதியின்மை

திருட்டுக் குற்றங்களில் மிகப் பெரும் குற்றம் தொழுகையில் திருடுவதாகும். திருடர்களில் மோசமான திருடன் தொழுகையில் திருடுபவனே! என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதும் அல்லஹ்வின் தூதரே! தொழுகையில் ஒருவன் எப்படித் திருடுவான்? எனத் தோழர்கள் வினவினர். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், அவன் தொழுகையில் ருகூவையும் சுஜூதையும் முழுமையாகச் செய்ய மாட்டான் எனக் கூறினார்கள். அறிவிப்பவர்: அப்துல்லாஹ் பின் அபீகதாதா (ரழி), நூல்: அஹ்மத்

தொழுகையில் அமைதியை விட்டுவிடுவது, ருகூவில்-சுஜூதில் முதுகை நேராக வைக்காமலிருப்பது, ருகூவிலிருந்து நிமிர்ந்த பிறகு முதுகை நேராகக் கொண்டு வராதது, இரண்டு ஸஜ்தாவுக்கு மத்தியிலுள்ள அமர்வில் முதுகை நேராக வைக்காமலிருப்பது ஆகியவை பெரும்பாலான தொழுகையாளிகளிடம் வெளிப்படையாகக் காணப்படுகின்றன. தங்கள் தொழுகையில் அமைதியைக் கடைபிடிக்காத இத்தகையவர்கள் இல்லாத பள்ளிகளே கிடையாது எனலாம். அமைதியைக் கடைபிடிப்பது தொழுகையின் முதல் நிலைக் கடமையாகும். இதல்லாமல் தொழுகை நிறைவேறாது. இந்த விஷயம் ஆபத்தானதாகும். 'ருகூவிலும், சுஜூதிலும் தமது முதுகை நேராக வைக்காத வரை ஒருவரது தொழுகை நிறைவேறாது' என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூமஸ்வூத் (ரழி), (அபூதாவூத்)

எனவே இது தீய செயலாகும். இதைச் செய்பவர் எச்சரிக் கைக்கும் கண்டனத்திற்கும் உரியவர் என்பதில் ஐய மில்லை. அபூஅப்தில்லாஹ் அல்அஷ்அரி (ரழி) அறிவிக்கிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் தம் தோழர்களுக்குத் தொழுகை நடத்தி விட்டு அவர்களில் ஒரு குழுவினருடன் அமர்ந்திருந்தனர். ஒரு மனிதர் வந்து தொழுதார். ருகூவு செய்யலானார். சுஜூ தில் காக்கை கொத்துவது போல அவசர அவரமாகச் செய் தார். உடனே நபி(ஸல்)அவர்கள், இவரைப் பார்த்தீர்களா? (அவசர அவசரமாகத் தொழுகின்ற) இந்த நிலையில் யார் மரணிக்கின்றாரோ அவர் முஹம்மதுடைய மார்க்கத்தில் மர ணிக்க மாட்டார். இவர் காக்கை இரத்தத்தைக் கொத்துவது போல அவசர அவசரமாகத் தொழுகிறார். ருகூவையும் சுஜூ தையும் காக்கை கொத்துவது போல அவசர அவசரமாகச் செய்பவருக்கு உதாரணம் பசித்தவனுக்கு ஒத்திருக்கிறது. அவன் ஒன்றிரண்டு பேரீத்தம் பழங்களை(அவசர கோலத் தில்) உண்ணுகிறான். அது அவனுக்கு என்ன பலனைத் தரப் போகிறது? எனக் கூறினார்கள். (இப்னு குஸைமா)

ருகூவையும் சுஜூதையும் பரிபூரணமாகச் செய்யாத ஒரு வரைக் கண்ட ஹுதைஃபா (ரழி) அவர்கள் 'நீ (முறையாகத்) தொழவில்லை. இந்நிலையில் நீ மரணித்துவிட்டால் முஹம் மத் (ஸல்) அவர்களை எந்த இயற்கை மார்க்கத்தில் அல்லாஹ் படைத்தானோ அந்த இயற்கை மார்க்கத்தில் நீ மரணிக்க மாட்டாய்' எனக் கூறியதாக ஸைத் பின் வஹ்ப் (ரஹ்) கூறினார் கள். (புகாரி)

எனவே தொழுகையில் அமைதியை விட்டு விட்டவர் அதன் சட்ட நிலையை அறிந்து கொண்டால் அந்தத் தொழுகையின் நேரம் கடந்துவிடவில்லையெனில் அதைத் திருப்பித் தொழு வது அவசியமாகும். காலம் கடந்துவிட்ட தொழுகைகளுக் காக (அவற்றை திருப்பித் தொழ முடியாதமைக்காக)

அல்லாஹ்விடம் பாவமன்னிப்புத் தேடிக்கொள்ளட்டும். அவற்றைத் திருப்பித் தொழ வேண்டிய அவசியமில்லை. பின்வரும் ஹதீஸ் இதை உணர்த்துகிறது: தொழுகையில் அமைதிநிலையைப் பேணாத ஒருவரைக் கண்ட நபி(ஸல்) அவர்கள், 'நீர் சென்று திருப்பித் தொழும் திண்ணமாக நீர் தொழவில்லை' எனக் கூறினார்கள். (சுருக்கம்- முஸ்லிம்)

## தொழுகையில் வீணான காரியங்களும் அதிகப்படியான அசைவுகளும்

இவை எப்படிப்பட்ட ஆபத்து எனில் தொழுகையாளிகளில் பலர் இவற்றிலிருந்து விடுபட முனைவதில்லை. காரணம் அவர்கள் அல்லாஹ்வின் கட்டளைகளைப் பேணுவதில்லை.

அல்லாஹ் கூறுகிறான்: அல்லாஹ்வின் திரு முன் உள்ளச் சத்தோடு நில்லுங்கள். (2:238)

மேலும் கூறுகிறான்: திண்ணமாக இறைநம்பிக்கையாளர்கள் வெற்றி பெற்று விட்டனர். அவர்கள் எத்தகையவர்கள் எனில் தங்களின் தொழுகையில் பயபக்தியை மேற்கொள்கின்றார்கள். (23:1,2)

தொழுகையில் சுஜூத் செய்யும்போது சுஜூத் செய்யுமிடத்தில் மணலை சமப்படுத்துவது குறித்து நபி(ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டபோது, 'நீ தொழுது கொண்டிருக்கும் போது மணலை சமப்படுத்தாதே! அவ்வாறு செய்துதான் ஆகவேண்டுமென்றால் பொடிப் பொடிக் கற்களை சமப்படுத்துவதற்காக ஒரு முறை செய்து கொள்' எனக் கூறினார்கள்.
அறிவிப்பவர்: முஅய்கீப்(ரழி), நூல்: அபூதாவூத்

தொழுகையில் அதிகமான அசைவுகள் தேவையில்லாமல் தொடர்ந்து நடைபெறுவது தொழுகையை வீணாக்கிவிடும் என கல்வியாளர்கள் கூறுகிறார்கள். அவ்வாறாயின் அல்லாஹ்

வின் திருமுன் நின்று கொண்டு தொழுகையில் வீணான காரியங்களைச் செய்பவர்களின் நிலை என்ன?அல்லாஹ்வின் திருமுன் நின்று கொண்டு அவர்கள் தம் கடிகாரத்தைப் பார்க்கின்றார்கள், ஆடையைச் சரிசெய்கின்றார்கள், விரலை மூக்கில் விடுகின்றார்கள், இடது புறமும், வலது புறமும், மேல் நோக்கியும் பார்க்கின்றார்கள், தம் பார்வை பறிக்கப்பட்டு விடும் என்றோ, தம் தொழுகையை விட்டும் ஷைத்தான் திசை திருப்பி விடுவான் என்றோ அவர்கள் அஞ்சுவதில்லை.

## வேண்டுமென்றே இமாமை முந்துவது

மனிதன் இயல்பாகவே அவசரப்படக் கூடியவனாக இருக்கிறான். 'மனிதன் பெரிதும் அவசரக் காரனாக இருக்கிறான்' என்று அல்லாஹ் கூறுகிறான். (17:11) நிதானம் அல்லாஹ்வின் புறத்திலிருந்து ஏற்படுகின்றது. அவசரம் ஷைத்தானின் புறத்திலிருந்து ஏற்படுகின்றது என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: ஸஹ்ல் பின் ஸஅத் (ரழி), நூல்: பைஹகீ

ஒருவன் ஜமாஅத்துடன் தொழும் போது தனது வலது பக்கமோ அல்லது இடது பக்கமோ தொழுகின்ற பெரும்பாலோர் ருகூவிலும், சுஜூதிலும், பொதுவாக ஒவ்வொரு தக்பீரிலும் ஏன் ஸலாம் கொடுப்பது உட்பட எல்லா நிலைகளிலும் பெரும்பாலும் இமாமை முந்துவதைக் கவனிக்கலாம். ஏன் சில சமயம் அவன் கூட இதற்கு விதிவிலக்காக இருக்க முடியாது. பெரும்பாலோரிடம் சாதாரணமாகத் தோன்றக்கூடிய இத்தகைய செயல் குறித்து நபி (ஸல்) அவர்கள் மூலமாக கடுமையான எச்சரிக்கை வந்துள்ளது. அவர்கள் கூறினார்கள்: இமாமுக்கு முன் தம் தலையை உயர்த்துபவர், தமது தலையை கழுதையின் தலையாக அல்லாஹ் மாற்றிவிடுவான் என்பதை அஞ்ச வேண்டாமா? அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரழி), முஸ்லிம்

தொழுகையாளி தொழுகைக்கு வரும் போதே அமைதியாக வும் கம்பீரமாகவும் வர வேண்டும் என்ற கட்டளை இருக்கும் போது தொழுகையில் எவ்வாறு இப்படி நடந்து கொள்ள முடியும்?

சிலர், இமாமைப் பிந்துவதும் ஒரு வகையில் இமாமை முந்துவதைப் போல என எண்ணிக் கொள்கின்றனர். எனவே ஒரு விஷயத்தை நாம் அறிந்து கொள்ள வேண்டும். ஃபிக்ஹ் கலை அறிஞர்கள் இது விஷயத்தில் அழகான ஒரு அடிப்படை யைக் கூறியிருக்கிறார்கள். என்னவெனில் இமாம் அல்லாஹு அக்பர் என்று கூறி முடித்தவுடன் மஃமூம்கள் பின் தொடர ஆரம்பிக்க வேண்டும். அதற்கு முந்தவும் கூடாது. பிந்தவும் கூடாது. இதுவே சிறந்ததாகும். நபித்தோழர்கள் தம் தொழு கையில் நபி(ஸல்) அவர்களை முந்தாமலிருப்பதற்கு மிகுந்த அக்கறை எடுத்துக் கொள்வார்கள்.

பர்ராஉ பின் ஆஸிப்(ரழி) கூறுகிறார்கள்: நபித் தோழர்கள் நபி(ஸல்)அவர்களின் பின்னால் நின்று தொழுவார்கள். அவர் கள் ருகூவிலிருந்து தமது தலையை உயர்த்தி பிறகு தமது நெற்றியை நிலத்தில் வைக்காத வரை யாரும் (ஸஜ்தாவுக் காக) தமது முதுகை வளைப்பதை நான் பார்த்ததில்லை. அதன் பிறகே பின்னால் உள்ள அனைவரும் ஸஜ்தாவில் விழ் வார்கள். (முஸ்லிம்)

நபி(ஸல்)அவர்கள் முதுமையை அடைந்த போது, தமது அசைவுகளில் ஒரு விதத் தாமதம் ஏற்பட்ட போது தம் பின் னால் தொழக் கூடியவர்களுக்கு இப்படி உணர்த்துவார்கள்: மக்களே! எனக்கு வயதாகிவிட்டது ருகூவிலும் சுஜூதிலும் என்னை முந்தாதீர்கள். முஆவியா பின் அபீ சுஃப்யான் அறிவிக் கக்கூடிய இச்செய்தி பைஹகீயில் பதிவு செய்யப்பட்டுள்ளது. இக்கருத்து அபூதாவூதிலும் உள்ளது.

இமாம் தொழுகை நடத்தும்போது தக்பீர் கூறுவதில் நபி வழிப்படி நடக்க வேண்டும். அபூஹுரைரா (ரழி) அவர்கள் அறிவிக்கும் நபிமொழியில் இவ்வாறு வந்துள்ளது: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுகைக்காக நின்றால் தக்பீர் கூறுவார்கள். பிறகு ருகூவு செய்யும் போது தக்பீர் கூறுவார்கள்... பிறகு (ஸஜ்தாவுக்காக) குனியும்போது தக்பீர் சொல்வார்கள். பிறகு (ஸஜ்தாவிலிருந்து) தமது தலையை உயர்த்தும் போது தக்பீர் சொல்வார்கள். பிறகு (மீண்டும்) ஸஜ்தா செய்யும் போது தக்பீர் கூறுவாாகள். பிறகு (ஸஜ்தாவிலிருந்து) தமது தலையை உயர்த்தும் போது தக்பீர் சொல்வார்கள். பிறகு இவ்வாறே தொழுது முடிக்கும் வரை அனைத்து ரக்அத்துகளிலும் நடந்து கொள்வார்கள். அதுபோல இரண்டாம் ரக்அத்தில் (அத்தஹிய்யாத்தில்) அமர்ந்த பிறகு (மூன்றாம் ரக்அத்துக்காக) எழும்போதும் தக்பீர் கூறுவார்கள். (புகாரி)

இமாம் தமது அசைவுகளுடன் தக்பீரையும் அமைத்துக் கொண்டால், மஃமூம்களும் முன்பு கூறப்பட்ட முறைப் பிரகாரம் இமாமை அக்கறையோடு பின்பற்றினால் ஜமாஅத்துடைய ஒழுங்கு அனைவருக்கும் நிறை வேறிவிடும்.

## வெங்காயம், பூண்டு, சாப்பிட்டதோடு பள்ளிக்கு வருதல்

அல்லாஹ் கூறுகிறான்: ஆதத்தின் மக்களே! ஒவ்வொரு தொழுகையின் போதும் உங்களை அலங்கரித்துக் கொள்ளுங்கள். (7:31) பூண்டையோ வெங்காயத்தையோ உண்டவர் நம்மை விட்டும் அல்லது நமது பள்ளியை விட்டும் விலகியிருக்கட்டும். தனது வீட்டில் உட்கார்ந்து கொள்ளட்டும் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: ஜாபிர் (ரழி), நூல்: புகாரி.

ஜாபிர் (ரழி) மேலும் அறிவிப்பதாவது: வெங்காயம், வெள்ளப் பூடு மற்றும் வெறுக்கத்தக்க வாடையுடைய செடியைச் சாப் பட்டவர் நம் பள்ளியின் பக்கம் நெருங்கவே வேண்டாம். மனிதர்கள் எதன் மூலம் தொல்லை அடைகிறார்களோ அதன் மூலம் மலக்குகளும் தொல்லையடைகின்றனர் என அல்லாஹ் வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். (முஸ்லிம்)

ஒரு முறை ஜும்ஆ நாளில் உமர் (ரழி) அவர்கள் உரை நிகழ்த்தினார்கள். தமது உரையில் இவ்வாறு கூறினார்கள்: மக்களே! நீங்கள் இரண்டு செடிகளை உண்கிறீர்கள். அவ் விரண்டையும் கெட்ட வாடையுடையதாகவே நான் கருதுகி றேன். அவை வெங்காயம், வெள்ளைப் பூண்டு. நான் நபி (ஸல்) அவர்களைப் பார்த்திருக்கிறேன், பள்ளியில் ஒருவரிடம் அதன் வாடையை உணர்ந்தால், அவரை வெளியேற்றும் படி உத்தரவிடுவார்கள். பிறகு பகீஃ எனுமிடத்திற்கு அவர் வெளி யேற்றப்படுவார். எனவே யாரேனும் அதைச் சாப்பிட விரும்பி னால் நன்கு சமைத்துச் சாப்பிடட்டும். அறிவிப்பவர்: மிதான் பின் அபீதல்ஹா (ரழி). நூல்: முஸ்லிம், நஸயீ

சிலர் தம் வேலைகளை முடித்துக் கொண்டு அப்படியே பள்ளிக்கு வந்துவிடுகின்றனர். அவர்களின் அக்குள்களிலிருந் தும் காலுறைகளிலிருந்தும் வெறுக்கத்தக்க வாடை வெளியே றுகின்றது. இதுவும் கூடாததாகும். இதை விடவும் மோசமா னது என்னவென்றால் பீடி, சிகரெட் குடிப்பவர்கள் அதைக் குடித்துவிட்டு பள்ளிக்கு வருகின்றனர். அதன் மூலம் மலக்குக ளுக்கும் தொழுகின்றவர்களுக்கும் தொல்லை தருகின்றனர்.

## விபச்சாரம்

மனிதனின் கண்ணியம், மானம் மரியாதையையும், அவனது சந்ததிகளையும் பாதுகாப்பது ஷரீஅத்தின்- இறைமார்க்கத்

தின் நோக்கங்களில் ஒன்றாக இருப்பதால் இறைமார்க்கத்தில் விபச்சாரத்திற்குத் தடை விதிக்கப்பட்டுள்ளது.

அல்லாஹ் கூறுகிறான்: மேலும் விபச்சாரத்தின் பக்கமே நெருங்காதீர்கள்! திண்ணமாக அது மானங்கெட்ட செயலாகவும், தீய வழியாகவும் இருக்கின்றது. (7:32) இன்னும் சொல்வதானால் பெண்கள் கட்டாயம் பர்தா அணிய வேண்டும், ஆண், பெண் இரு பாலாரும் தம் பார்வையைத் தாழ்த்திக் கொள்ள வேண்டும், பெண்கள் அந்நிய ஆண்களுடன் தனித்திருக்கக் கூடாது என்றெல்லாம் கட்டளை பிறப்பித்து விபச்சாரத்தின் பால் இட்டுச் செல்லக்கூடிய அனைத்து வழிகளையும் ஷரீஅத் அடைத்து விட்டது.

திருமணமானவர் (ஆணோ, பெண்ணோ) விபச்சாரம் செய்தால் கடுமையாக தண்டிக்கப்படுவார். அவருக்குரிய தண்டனை மரணிக்கும் வரை அவர் மீது கல்லெரிய வேண்டும். இது, அவர் செய்த தீய செயலின் விளைவை அவர் சுவைப்பதற்காகவும் அவருடைய உடலிலுள்ள ஒவ்வொரு உறுப்பும் விபச்சாரக் குற்றத்தைச் செய்யும்போது இன்பத்தை அனுபவித்தது போல இப்போது வேதனையை அனுபவிப்பதற்காகவும் ஆகும். திருமணமாகாதவர் அதாவது முறையாகத் திருமணம் செய்து இல்லறத்தில் ஈடுபடாதவர் விபச்சாரம் செய்தால் அவருக்கு அதிக அளவு கசையடி கொடுக்க வேண்டும். ஷரீஅத்துடைய குற்றவியல் சட்டத்தில் நூறு கசையடிகள் என்று வந்துள்ளது. மட்டுமல்ல குற்றவாளிக்கு அவமானமும் (மற்றவர்களுக்குப் படிப்பினையும்) ஏற்படும் வகையில் முஃமின்களின் ஒரு கூட்டத்துக்கு மத்தியில் அத்தண்டனை நிறைவேற்றப்பட வேண்டும். மேலும் முழுமையாக ஒரு வருடத்திற்கு அவரை நாடு கடத்தி இழிவை ஏற்படுத்த வேண்டும்.

விபச்சாரம் செய்தவர்களுக்கு கப்ரில் வேதனையாவது, அவர்கள் ஒரு அடுப்பில் நிர்வாணமாகக் கிடப்பார்கள் அதன்

மேல் புறம் குறுகலாகவும் கீழ்ப்புறம் விசாலமாகவும் இருக்கும். கீழிருந்து நெருப்பு மூட்டப்படும். அப்போது அவர்கள் ஓலமிடு வர். மேலே வந்து அதனை விட்டும் வெளியேற எத்தணிப்பர். பிறகு நெருப்பு அணைக்கப்படும்போது அவர்கள் உள்ளே திரும்பிவிடுவர். இவ்வாறு கியாம நாள் வரை செய்யப்படும்.

வயது கடந்து மண்ணறையைச் சந்திக்கும் நேரம் நெருங்கி விட்ட ஒரு மனிதர் - இது நாள் வரையில் அல்லாஹ் அவருக்கு (திருந்துவதற்கான) அவகாசம் அளித்திருந்தும் - தொடர்ந்து விபச்சாரம் செய்து வந்தால் விவகாரம் இன்னும் மோசமாகும். அபூஹுரைரா (ரழி) அறிவிக்கிறார்கள்: மூவரிடம் அல்லாஹ் மறுமையில் பேசமாட்டான், அவர்களை (பாவங்க ளிலிருந்து) பரிசுத்தப்படுத்தவும் மாட்டான், அவர்களுக்கு துன்பமிகு வேதனை இருக்கிறது. அவர்கள், வயது கடந்தும் விபச்சாரம் செய்தவர், மகாப் பொய்யனாக உள்ள அரசன், ஆணவம் கொண்ட ஏழை ஆகியோராவர் என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். (முஸ்லிம்)

விபச்சாரம் செய்து சம்பாதிப்பது சம்பாத்தியங்களில் தீய சம்பாத்தியமாகும். தனது மானத்தை விற்று சம்பாத்தியம் செய்யும் ஒரு விபச்சாரி - ஹதீஸில் வந்துள்ளது போல - பாதி இரவு கழிந்ததும் வானத்தின் வாயில்கள் திறக்கப்படுகின்ற சமயத்தில் பிரார்த்தனை அங்கீகரிக்கப்படும் பாக்கியத்தை விட்டும் தடுக்கப்பட்டவளாவாள். அல்லாஹ்வின் வரம்புகளை மீறுவதற்கு தேவையும் வறுமையும் பொதுவாக மார்க்கம் அனுமதிக்கின்ற காரணமாக அமையாது. பட்டினி கிடந்தா லும் படி தாண்ட மாட்டாள் பத்தினி என்பது பழமொழி.

தற்காலத்தில் ஆபாசத்தினுடைய அனைத்து வாயில்களும் திறக்கப்பட்டுவிட்டன. அதற்கான வழியை ஷைத்தான் தன் னுடைய சூழ்ச்சியாலும் தன் நண்பர்களுடைய சூழ்ச்சியாலும் எளிதாக்கிவிட்டான். பாவிகளும் தீயவர்களும் அவனைப் பின்

**பற்றலானார்கள். அதனால் பெண்கள் தங்கள் அழகு, அலங் காரங்களை வெளிக்காட்டுவது அதிகமாகிவிட்டது. ஆபாசங் களும் அந்நியப் பெண்களைப் பார்த்தலும், ஆண்களும் பெண் களும் இரண்டறக் கலந்து விடுதலும் பரவலாகி விட்டன. மஞ்சள் பத்திரிக்கைகளும், நீலப்படங்களும் பரவிவிட்டன. தீமைகள் நிறைந்த, கட்டுப்பாடற்ற நாடுகளுக்கு பயணமா வது அதிகரித்து விட்டது. விபச்சார விடுதிகளும், பாலியல் பலாத்காரங்களும், கற்பழிப்புகளும் பெருகி விட்டன. கருக் கலைப்புகளும் தவறான வழியில் பிறந்த குழந்தைகளின் எண் ணிக்கையும் அதிகமாகி விட்டன.**

**இறைவா! உனது அருளையும் அன்பையும் மன்னிப்பையும் உன் புறத்திலிருந்து பாதுகாப்பையும் உன்னிடம் வேண்டுகி றோம். அதன் மூலம் ஆபாசங்கள் மற்றும் மானக்கேடானவற் றை விட்டும் எங்களைப் பாதுகாப்பாயாக! மேலும் எங்கள் உள்ளங்களைத் தூய்மைப்படுத்தி, எங்கள் கற்புகளைக் காத்திடவும் விலக்கப்பட்டவைகளுக்கும் எங்களுக்கும் மத் தியில் ஒரு திரையை ஏற்படுத்தவும் வேண்டுகிறோம்.**

## ஓரினப் புணர்ச்சி

லூத் (அலை) அவர்களுடைய சமுதாயத்தினர் செய்து வந்த குற்றம் ஒன்று இருந்தது. அது தான் ஆணும் ஆணும் புணர் வது. அல்லாஹ் கூறுகிறான்: மேலும் நாம் லூத்தை அனுப்பி னோம். அப்போது அவர் தம் சமூகத்தாரிடம் கூறினார்: 'உங்க ளுக்கு முன்னால் உலக மக்கள் யாரும் செய்திராத மானக் கேடான செயல்களை நீங்கள் செய்கின்றீர்கள். (மோகம் கொண்டு) ஆண்களிடம் செல்கின்றீர்கள், வழிப்பறி செய்கின் றீர்கள், உங்கள் சபைகளில் வைத்தே தீய செயல்களில் ஈடுபடுகின்றீர்கள்'. அதற்கு அவருடைய சமூகத்தாரின் பதில்,

நீர் உண்மையாளராயின் அல்லாஹ்வின் வேதனையை எங்களுக்குக் கொண்டுவாரும் என்பதாகவே இருந்தது. (29:28,29)

இந்த இழிவான படுமோசமான குற்றத்துக்காக அதைச் செய்தவர்களை அல்லாஹ் நான்கு வகையான தண்டனைகளைக் கொடுத்துத் தண்டித்தான். வேறெந்த சமூகத்தையும் அல்லாஹ் இப்படித் தண்டித்ததில்லை. அவை: அவர்களின் கண்களைக் குருடாக்கினான். அவர்கள் வசித்த ஊரை தலைகீழாகப் புரட்டினான், அவர்களின் மீது சுட்ட கற்களை தொடர்ந்து பொழியச் செய்தான். அவர்கள் மீது பேரிடியை விழச் செய்தான்.

(முஹம்மத் (ஸல்) அவர்கள் கொண்டுவந்த) இந்த ஷரீஅத்தில் சரியான கூற்றின் படி வாளால் வெட்டிக் கொல்வதே இக்குற்றத்தைச் செய்த இருவரின் தண்டனையாகும். அவ்விருவரும் சுயவிருப்பத்தின் படி அதைச் செய்திருந்தால். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: லூத் (அலை) சமுதாயத்தினர் செய்த செயலை செய்யக் கூடியவர்களை நீங்கள் கண்டால் செய்தவனையும் செய்யப்பட்டவனையும் கொன்று விடுங்கள். அறிவிப்பவர்: இப்னு அப்பாஸ் (ரழி), நூல்: அஹ்மத்

இது போன்ற மானக்கேடான செயல்களால் நம் முன்னோர்களின் காலத்தில் இல்லாத உயிர்க்கொல்லி நோயான எய்ட்ஸ் போன்ற பல்வேறு தொற்று நோய்கள் இன்றைய காலத்தில் பரவி வருவதைப் பார்க்கும்போது இக்குற்றத்துக்கு இத்தகைய தண்டனை விதித்திருப்பதில் இறைவனுடைய நுட்பம் நமக்குத் தெரிய வருகிறது.

## கணவனின் படுக்கைக்கு வர மறுத்தல்

ஒரு பெண் தன்னுடைய கணவன் படுக்கைக்கு அழைக்கும் போது மார்க்க ரீதியான தக்க காரணம் இல்லாமல் வராமலிருப்பது ஹராமாகும்.

ஒருவர் தன் மனைவியை படுக்கைக்கு அழைக்கும் போது அவள் வர மறுத்தால் அவள் மீது அவன் கோபம் கொண்ட நிலையில் அந்த இரவை அவன் கழித்தால் விடியும் வரை வானவர்கள் அவளை சபிக்கின்றனர் என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறினார்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரழி), (புகாரி)

தனக்கும் தன் கணவனுக்குமிடையே பிரச்சனை ஏற்படும் போது பெரும்பாலான பெண்கள் அவனைத் தண்டிப்பதாக எண்ணிக் கொண்டு அவனுக்கு இல்லற சுகத்தை மறுத்து விடுகின்றனர். சில வேளை இதனால் பெரும் தீங்குகள் ஏற்படும். அவற்றில் ஒன்று கணவன் தவறான வழிக்குச் செல்வது. சில வேளை விவகாரம் அவளுக்கு எதிராகத் திரும்பி, கணவன் அவளுக்கு மேல் இன்னொருத்தியை மணப்பதைப் பற்றி வினையமாகச் சிந்திக்கத் தலைப்படலாம்.

எனவே கணவன் படுக்கைக்கு அழைக்கும்போது நபி (ஸல்) அவர்களின் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து, விரைந்து அந்த அழைப்பை ஏற்றுக் கொள்வது மனைவியின் கடமையாகும். ஒரு மனிதன் தன் மனைவியை படுக்கைக்கு அழைத்தால் அவள் (பயணம் புறப்படுவதற்காக) ஒட்டகத்தின் சேணத்தின் மேல் அமர்ந்திருந்தாலும் செல்லட்டும் என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறினார்கள். அறிவிப்பவர்: ஸைத் பின் அர்க்கம். (பஸ்ஸார்)

அதே நேரத்தில் தன்னுடைய மனைவி நோயாளியாகவோ, கர்ப்பிணியாகவோ அல்லது வேறு ஏதேனும் ஒரு துன்பத்தில் இருந்தால் அது போன்ற சமயங்களில் அவளை இல்லறத்திற்கு நிர்ப்பந்திக்காதிருப்பது கணவன் மீது கடமையாகும். காரணம் அவ்விருவருக்குமிடையே பிணக்கு ஏற்படாமல் கருத்தொற்றுமை நீடிக்க வேண்டுமென்பதற்காக.

## காரணமின்றி பெண் விவகாரத்துக் கோரல்

பெரும்பாலான பெண்கள் ஒரு சின்னப் பிரச்சனை ஏற்பட்டாலும் தங்கள் கணவன்மார்களிடம் விவாகரத்தைக் கோர விரைகின்றனர். அல்லது தான் விரும்பும் பொருளை தன் கணவன் கொடுக்காவிட்டால் மனைவி அவனிடம் விவாகரத்தைக் கோருகின்றாள். சில சமயம் அவள் சில குழப்பமூட்டுகிற உறவினரால் அல்லது அண்டை வீட்டாரால் இவ்வாறு நடந்து கொள்வதற்குத் தூண்டப்படுகிறாள். சில சமயம் 'நீ ஓர் ஆண் பிள்ளையாக இருந்தால் என்னை விவாகரத்துச் செய்து பார்' என்பது போன்ற உணர்வுகளைத் தூண்டக்கூடிய வார்த்தைகளால் தன் கணவனிடம் சவால் விடுகிறாள்.

விவாகரத்தால் பெரும் பிரச்சனை ஏற்படும் என்பது அறிந்ததே! குடும்பம் சிதைந்து குழந்தைகள் சின்னா பின்னமாகி விடுவர். பலனளிக்காத நேரத்தில் கைசேதப்பட வேண்டியது வரும். இதனாலும் இன்ன பல காரணங்களாலும் தான் விவாகரத்துச் செய்வதை மார்க்கம் தடை செய்திருப்பதில் உள்ள தத்துவம் தெரிய வருகிறது.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: எந்தப் பெண்ணாயினும் ஒரு காரணமுமில்லாமல் தன் கணவரிடம் விவாகரத்தைக் கோரினால் சுவனத்தின் வாடை அவளுக்கு ஹராமாகிவிடும். அறிவிப்பவர்: ஸவ்பான் (ரழி), நூல்: அஹ்மத். விவகாரத்துக் கோரக்கூடிய பெண்கள் நயவஞ்சகர்கள் என்பதும் நபிமொழி. உக்பா பின் ஆமிர் (ரழி) அறிவிக்கும் இந்நபிமொழி தப்ரானியில் உள்ளது.

மார்க்கம் அனுமதிக்கின்ற காரணம் இருந்தால், உதாரணமாக கணவன் தொழுகையை விட்டு விடுகிறான் அல்லது போதைப் பொருளைப் பயன்படுத்துகிறான் அல்லது விலக்கப்பட்ட காரியத்தைச் செய்ய தனது மனைவியை நிர்ப்பந்திக்

கிறான் அல்லது அவளைத் துன்புறுத்தியோ அல்லது இறை மார்க்கம் அவளுக்கு வழங்கியிருக்கின்ற உரிமைகளைத் தர மறுத்தோ அவளைக் கொடுமைப்படுத்துகிறான், பிறகு அறிவு ரைகளும், சீர்திருத்த முயற்சிகளும் அவனுக்கு எந்தப் பலனை யும் அளிக்கவில்லையெனில் இதுபோன்ற சந்தர்ப்பங்களில் ஒரு பெண் தன்னையும் தன் மார்க்கத்தையும் காத்துதக் கொள்வதற்காக விவாகரத்தைக் கோரினால் அவள் மீது எந்தக் குற்றமும் கிடையாது.

## ழிஹார்

அறியாமைக் காலத்தில் பயன்படுத்தப்பட்ட- இந்த சமு தாயத்திலும் பரவியிருக்கின்ற பல வார்த்தைகளில் ழிஹாரும் ஒன்று. அதாவது ஒரு கணவன் தன் மனைவியிடம் 'நீ எனக்கு என் தாயைப் போன்றவள்', 'நீ எனக்கு என் சகோதரியைப் போன்றவள்' என்பன போன்ற மோசமான வார்த்தைகளைக் கூறுவர். இதற்கு ழிஹார் எனப்படும். பெண்ணுக்கு இதிலே அநீதியிருப்பதால் இறைமார்க்கம் இதை அறுவருப்பாகக் கரு துகிறது. இது பற்றி அல்லாஹ் இவ்வாறு கூறியுள்ளான்:

உங்களில் எவர்கள் தம் மனைவியரை ழிஹார் செய்கின் றார்களோ அவர்களின் மனைவியர் அவர்களுக்கு அன்னைய ராகிவிட மாட்டார்கள். அவர்களைப் பெற்றெடுத் தவரே அவர் களின் அன்னையராவர். அவர்கள் வெறுக்கத்தக்க பொய் யான சொல்லையே கூறுகின்றனர். திண்ணமாக அல்லாஹ் பெரிதும் பிழை பொறுப்பவனும் மன்னிப்பவனுமவான். (58:2)

இது விஷயத்தில் இறைமார்க்கம் பரிகாரத்தை ஏற்படுத்தி யுள்ளது. அந்தப் பரிகாரம், தவறுதலாக ஒருவரைக் கொலை செய்து விட்டால் அதற்கு செய்ய வேண்டிய பரிகாரத்தைப் போல, இன்னும் ரமழான் பகலில் (நோன்பு வைத்துக் கொண்டு) ஒருவர் தம் மனைவியிடம் தாம்பத்தியத்தில் ஈடுபட்டு விட்டால்

அதற்குச் செய்ய வேண்டிய பரிகாரத்திற்கு ஒத்த கடுமையான பரிகாரமாகும். ழிஹார் செய்தவர் இந்தப் பரிகாரத்தைச் செய் யாத வரை மனைவியுடன் இல்லறம் நடத்தக் கூடாது.

அல்லாஹ் கூறுகிறான்: எவர்கள் தம் மனைவியரை ழிஹார் செய்து பின்னர் தாங்கள் கூறிய சொல்லை விட்டும் திரும்பி விடுகின்றார்களோ அவர்கள் - இருவரும் ஒருவரை யொருவர் தொடும் முன்பாக அடிமையை விடுதலை செய்ய வேண்டும். இவ்வாறே உங்களுக்கு அறிவுரை கூறப்படுகின்றது. மேலும் நீங்கள் எவற்றைச் செய்கின்றீர்களோ அவற்றை அல்லாஹ் மிகவும் அறிந்தவனாக இருக்கின்றான். இனி எவருக்கேனும் அடிமை கிடைக்கவில்லையெனில், அவ்விருவரும் தொடும் முன் இரண்டு மாதம் தொடர்ந்து நோன்பு நோற்க வேண்டும். ஒருவர் இதற்கு சக்தி பெறா விட்டால், அறுபது ஏழைகளுக்கு உணவளிக்க வேண்டும். இந்தக் கட்டளை ஏன் அளிக்கப்படு கிறதென்றால், அல்லாஹ்வின் மீதும் அவனுடைய தூதர் மீதும் நீங்கள் நம்பிக்கை கொள்ள வேண்டும் என்பதற்காகத்தான். இவை அல்லாஹ்வினால் நிர்ணயிக்கப்பட்ட வரம்புகளாகும். மேலும் நிராகரிப்பவர்களுக்குத் துன்புறுத்தும் தண்டனை இருக்கின்றது. (58:34)

## மாதவிடாய்க் காலத்தில் உடலுறவு

இன்னும் மாதவிடாய் பற்றியும் உம்மிடம் கேட்கின்றார்கள். நீர் கூறும்: அது ஒரு தூய்மையற்ற நிலை, ஆகவே மாத விடாய்க் காலத்தில் பெண்களை விட்டும் விலகி இருங்கள் அவர்கள் தூய்மையாகும் வரை அவர்களை அணுகாதீர்கள். (2:222) அவள் தூயமையடைந்த பிறகு குளிக்காத வரை அவளிடம் உறவு கொள்வது கூடாது. அல்லாஹ் கூறுகிறான்: பிறகு அவர்கள் தூய்மையடைந்து விட்டால் அல்லாஹ் உங் களை ஏவிய முறைப்படி அவர்களிடம் செல்லுங்கள். (2:222)

இது எவ்வளவு பெரிய மோசமான பாவமென்பதை பின் வரும் நபிமொழி உணர்த்துகிறது. யாரேனும் மாதவிடாய் ஏற்பட்ட பெண்ணிடம் அல்லது பெண்ணின் பின் துவாரத்தில் உறவு கொண்டால் அல்லது குறிகாரனிடம் சென்றால் முஹம் மதுக்கு இறக்கியருளப்பட்ட (வேதத்)தை அவன் நிராகரித்து விட்டான் என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார் கள். அறிவப்பவர்: அபூஹுரைரா (ரழி), நூல்: திர்மிதி

இதனை ஒருவர் வேண்டுமென்றே அல்லாமல் தவறுத லாக, (அதன் சட்டத்தை) அறியாமல் செய்து விட்டால் அவர் மீது எந்தக் குற்றமுமில்லை. வேண்டுமென்றே (சட்டம்) அறிந்து செய்தால், சில அறிஞர்களின் கூற்றின் பிரகாரம் அவர் பரிகா ரம் செய்வது அவசியமாகும். பரிகாரம் பற்றி கூறப்படக் கூடிய ஹதீஸை அவர்கள் சரி காணுகின்றனர். பரிகாரம் என்பது ஒரு தீனார் அல்லது பாதி தீனார் தர்மம் செய்வதாகும். இந்த ஒரு தீனார் அல்லது பாதி தீனார் கொடுப்பதிலேயும் அவர்கள் கருத்து வேறுபாடு கொள்கின்றனர்.

சிலர் கூறுகின்றனர்: அவ்விரண்டில் ஒன்றை அவர் தெரிவு செய்து கொள்ளலாம். அதாவது விரும்பினால் ஒரு தீனாரோ அல்லது பாதி தீனாரோ கொடுக்கலாம். இன்னும் சிலர் கூறு கின்றனர்: மாதவிடாய் காலத்தின் கடைசி கட்டத்தில் உதிரப் போக்கு மிகவும் குறைந்து விடும்போதோ அல்லது அவள் குளிப்பதற்கு முன்போ அவளிடம் அவர் உறவு கொண்டால் அவர் பாதி தீனார் கொடுக்க வேண்டும். உதிரப்போக்கு அதி கம் ஏற்படுகின்ற மாதவிடாயின் ஆரம்ப கட்டத்தில் அவளிடம் அவர் உறவு கொண்டால் அவர் ஒரு தீனார் கொடுக்க வேண் டும். ஒரு தீனார் என்பது மக்களுடைய வழக்கத்தில் உள்ள அளவின்படி 4.25 கிராம் தங்கமாகும். இந்த அளவு தங்கத் தையோ இதன் மதிப்புக்கு ஈடான ரொக்கப் பணத்தையோ அவன் தர்மம் செய்யலாம்.

## மலப்பாதையில் உடலுறவு

பலவீனமான ஈமானுடைய ஒரு சிலர் தம் மனைவியரின் மலத்துவாரத்தில் உடலுறவு கொள்வதிலிருந்து விலகி பேணு தலாக இருப்பதில்லை. இது பெரும்பாவங்களில் ஒன்றாகும். இவ்வாறு செய்பவரை நபி(ஸல்)அவர்கள் சபித்துள்ளார்கள். அபூஹுரைரா (ரழி) அறிவிக்கிறார்கள்: பெண்ணின் பின்துவாரத் தில் புணர்பவன் சாபத்திற்குரியவன் என அல்லாஹ்வின் தூதர் (ஸல்)அவர்கள் கூறினார்கள். (அஹ்மத்)

இன்னும் சொல்வதானால் 'மாதவிடாய் ஏற்பட்ட பெண்ணி டம் அல்லது பெண்ணின் பின் துவாரத்தில் உடலுறவு கொண் டவன், அல்லது குறிகாரனிடம் சென்றவன் முஹம்மதுக்கு இறக்கியருளப்பட்ட (வேதத்)தை நிராகரித்து விட்டான் என வும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்)அவர்கள் கூறியுள்ளார்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரழி), நூல்: திர்மிதி

நற்சிந்தனையுடைய மனைவியர் சிலர் இதனை மறுத்தா லும் சில கணவன்மார்கள் இதற்கு நீ இணங்கவில்லையெனில் உன்னை விவாகரத்துச் செய்துவிடுவேன் என மிரட்டுகின்ற னர். இன்னும் சிலரோ இது கூடுமா? கூடாதா? என மார்க்க அறிஞர்களிடம் விளக்கம் கேட்பதற்கு வெட்கப்படக்கூடிய தம் மனைவியரை இது கூடும் என்ற சந்தேகத்தில் ஆழ்த்தி ஏமாற்றி விடுகின்றனர். சிலபோது பின்வரும் வசனத்தையும் அவளுக்கு ஆதாரமாகக் காட்டுகின்றனர்.

அல்லாஹ் கூறுகின்றான்: உங்கள் மனைவியர் உங்கள் விளைநிலங்களாவர். உங்கள் விளைநிலங்களுக்கு நீங்கள் விரும்பும் முறையில் செல்லுங்கள். (2:223) ஆனால் திருக்குர் ஆனுக்கு விளக்கமாக ஹதீஸ்கள் அமைந்திருக்குமென்பது நாம் அறிந்த ஒன்றாகும். கணவன் தம் மனைவியின் பிறப்பு உறுப்பில் அவன் விரும்பும் முறையில் முன்புற வழியாகவோ

பின்புற வழியாகவோ உடலுறவு கொள்ளலாம் என்பதை திண் ணமாக நபி(ஸல்)அவர்கள் தெளிவுபடுத்தியே உள்ளனர். அப் படியிருக்க பின்துவாரமென்பது பிறப்பு உறுப்பு அல்லவே.

இத்தகைய தீமையின் காரணங்களுள் மற்றொன்று என்ன வெனில், தூய்மையான திருமண வாழ்க்கையில் பிரவேசிப்ப தற்கு முன் அறியாமைக்காலத்து அருவருக்கத்தக்க தீய நடத்தைகளை அனந்தரப் பழக்கங்களாகப் பெறுகிறான் மனிதன். மேலும் ஹறாமென விலக்கப்பட்ட விநோதமான பாலுணர்வு அனுபவங்களுடன் அல்லது ஆபாசமான படங் களின் தீய காட்சிகளால் நிறைந்த சிந்தனையுடன் வருகி றான். இத்தகைய பாவங்களிலிருந்து பாவமன்னிப்புத் தேடா மலேயே தூய்மையான திருமண வாழ்க்கையில் பிரவேசித்து விடுகிறான்.

ஆக இச்செயல் - கணவன் மனைவி இருவரும் இதனைப் பொருந்திக் கொண்டாலும் - ஹறாமானதே என்பது தெளிவு. ஏனெனில் ஒரு ஹறாமைப் பொருந்திக் கொள்வது அதை ஹலாலாக மாற்றி விட முடியாது.

## மனைவியருக்கிடையில் அநீதமாக நடத்தல்

அல்லாஹ் தனது வேதத்தில் நமக்கு அறிவுறுத்திய விஷ யங்களில் மனைவியருக்கிடையே நீதமாக நடந்து கொள்ள வேண்டும் என்பதும் ஒன்றாகும். அல்லாஹ் கூறுகிறான்: நீங்கள் எவ்வளவு தான் விரும்பினாலும் மனைவியரிடையே நேர்மையாக நடந்து கொள்ளவது சாத்தியமாகாது. ஆனால் (ஒருரே மனைவியின் பக்கமே) முற்றிலும் சாய்ந்து மற்றவளை அந்தரத்தில் விடப்பட்டவள் போன்று ஆக்கிவிடாதீர்கள். நீங்கள் உங்கள் நடத்தையைச் சீராக்கிக் கொண்டு அல்லாஹ்வுக்கு அஞ்சி வாழ்ந்தால் திண்ணமாக அல்லாஹ்

மன்னிப்பு வழங்குபவனாகவும் கருணையுள்ளவனாகவும் இருக்கிறான். (4:129)

அல்லாஹ் விரும்பும் நீதம் என்பது மனைவியருடன் இரவு தங்குவதில் நீதமாக நடந்து கொள்வதும், உணவு, உடை, உறைவிடம் ஆகியவற்றில் ஒவ்வொருவருக்கும் உரிய உரிமையை வழங்குவதும் ஆகும். நீதம் என்பது அன்பு செலுத்துவதில் அல்ல. ஏனெனில் அதில் மனிதன் நீதமாக நடந்து கொள்ள முடியாது.

மக்களில் சிலர் தம்மிடம் ஒன்றுக்கு மேற்பட்ட மனைவியர் இருக்கும்போது ஒரு மனைவியின் பக்கமே முற்றிலும் சாய்ந்து மற்றவளை கவனிக்காமல் விட்டுவிடுகின்றனர். அந்த ஒருத்தியிடம் மட்டும் அதிக இரவுகள் தங்குகின்றனர். அல்லது மற்றவளை விட்டு விட்டு ஒருத்திக்கு மட்டும் செலவு செய்கின்றனர். இது ஹராம்- தடுக்கப்பட்டதாகும். அவர் மறுமையில் எந்த நிலையில் வருவார் என்பதை பின்வரும் நபிமொழி கூறுகிறது. அபூஹுரைரா (ரழி) அறிவிக்கிறார்கள்: ஒருவருக்கு இரு மனைவியர் இருந்து ஒரு மனைவியின் பக்கம் அவர் (முழுமையாகச்) சாய்ந்துவிட்டால் மறுமையில் அவரது ஒரு புஜம் சாய்ந்த நிலையில் வருவார் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (அபூதாவூத், தாரமி)

## அந்நியப் பெண்ணுடன் தனித்திருத்தல்

ஷைத்தான் மனிதர்களை குழப்புவதற்கும் விலக்கப்பட்டவைகளில் அவர்களை வீழ்த்துவதற்கும் பெரும் ஆர்வம் கொண்டவன். இதனால்தான் அல்லாஹ் நம்மை இப்படி எச்சரிக்கிறான்: நம்பிக்கை கொண்டவர்களே! ஷைத்தானின் அடிச்சுவடுகளைப் பின்பற்றாதீர்கள். யாரேனும் அவனுடைய அடிச்சுவடுகளைப் பின்பற்றினால் மானக்கேடானவை மற்றும் தீயவற்றைச் செய்யுமாறே ஷைத்தான் அவனை ஏவுவான்.

(24:21) மனிதனின் இரத்தம் ஓடும் நாளங்களில் ஷைத்தான் ஓடுகின்றான். மனிதர்களை மானக்கேடானவற்றில் வீழ்த்துவதற்கு ஷைத்தான் கையாளும் வழிகளில் ஒன்று தான் அந்நியப் பெண்ணுடன் ஒரு ஆண் தனித்திருப்பதாகும். இதனால் தான் இறைமார்க்கம் இப்பாதையை அடைத்து விட்டது.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: எந்த ஆணும் (அந்நியப்) பெண்ணுடன் தனித்திருக்க வேண்டாம். ஏனெனில் மூன்றாவது ஆளாக ஷைத்தான் இருப்பான். அறிவிப்பவர்: புரைதா (ரழி), நூல்: *திர்மிதி*

பனூ ஹாஷிம்களில் சிலர் அஸ்மா பின்த் உமைஸ் (ரழி) யிடம் வந்தனர். அப்போது அஸ்மா (ரழி) அபூபக்கர் (ரழி) யின் மனைவியாக இருந்தார்கள். (சிறிது நேரத்திற்குப்) பிறகு அபூபக்கர் (ரழி) வந்ததும் அவர்களைக் கண்டார்கள். கணவன் இல்லாத வீட்டிற்கு அவர்கள் வந்ததை அபூபக்கர் (ரழி) விரும்பவில்லை. அதனால் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் அதைத் தெரிவித்தார்கள். மேலும் நான் இதை (தவறாக அல்லாமல்) நல்லதாகவே கருதுகிறேன் என்றும் கூறினார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், திண்ணமாக அல்லாஹ் அவளைக் குற்றமற்றவளாக ஆக்கியிருக்கின்றான் எனக் கூறிவிட்டு மிம்பரில் ஏறி, 'இதற்குப் பிறகு எந்த ஆணும் கணவன் வீட்டில் இல்லாதபோது ஒரு பெண்ணிடம் செல்லக் கூடாது. அவருடன் ஒருவரோ இருவரோ சேர்ந்து சென்றாலே தவிர' என்று கூறினார்கள். அறிவிப்பவர்: அப்துல்லாஹ் பின் அம்ர் (ரழி), நூல்: முஸ்லிம்

எனவே எந்த ஆணும் தம் சகோதரரின் மனைவி அல்லது வேலைக்காரி போன்ற அந்நியப் பெண்ணுடன் அல்லது பெண் நோயாளி மருத்துவருடனும் வீட்டிலோ, அறையிலோ அல்லது காரிலோ தனித்திருப்பது கூடாது. ஆயினும் பெரும்பாலோர் இதில் அலட்சியமாகவே இருக்கின்றனர். தம் மீதோ பிறர்

மீதோ நம்பிக்கை வைத்து இப்படி நடந்து கொள்கின்றனர். இதனால் மானக்கேடான காரியங்களில் அல்லது அதற்கான தூண்டுதல்களில் ஈடுபட வேண்டிய நிலை ஏற்பட்டுவிடும்.மட்டு மல்ல குழந்தைகள் தவறான வழியில் பிறத்தல்,சந்ததிக் கலப்பு ஏற்படுதல் எனும் வருந்தத்தக்க நிலையும் அதிகரித்து விடும்.

## அந்நியப் பெண்ணுடன் முஸாஃபஹா செய்தல்

சமூகப் பழக்கவழக்கங்களில் சில நம் சமுதாயத்தில் இறைமார்க் கத்தையும் விஞ்சிவிட்டன. அதுபோல மக்களின் தவறான பழக்கங்களும்,பாரம்பரிய நடைமுறைகளும் இறைச் சட்டங்களை எந்த அளவுக்கு மிகைத்து விட்டன எனில் யாருக்கேனும் ஷரீஅத்தின் சட்டங்களை நீ எடுத்துச் சொன் னால், அவற்றை ஆதாரத்தோடு நிரூபித்து, சான்றுகளையும் தெளிவுபடுத்தினால் உடனே உன்னைப் பழமைவாதி, அடிப் படைவாதி, குடும்ப உறவை குலைப்பவன், நல்ல எண்ணங் களில் சந்தேகத்தை ஏற்படுத்துபவன்...என்றெல்லாம் அவ தூறு கூறி விடுவர். அத்தகைய பழக்கவழக்கங்களில் ஒன்று தான் அந்நியப் பெண்ணுடன் முஸாஃபஹா செய்தல்.

சிறிய தந்தையின் மகள், மாமி மகள், தாய் மாமன் மகள், சின்னம்மா மகள், அண்ணன்-தம்பி மனைவி, சிறிய தந்தையின் மனைவி, மாமாவின் மனைவி போன்ற பெண்களுடன் முஸாஃப ஹாச் செய்வது நம் சமுதாயத்தில் தண்ணீர் குடிப்பதை விட வும் சாதாரண விஷயமாக மாறிவிட்டன. (தமிழ் நாட்டில் இந்தப் பழக்கம் இல்லை.) மார்க்க ரீதியாக இச்செயல் எவ்வ ளவு ஆபத்தானது என்பதை தெளிந்த நோக்குடன் சிந்தித் துப் பார்த்தால் அதைச் செய்ய மாட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்)அவர்கள் கூறினார்கள்: உங்களில் ஒருவர் அவ ருக்கு ஹலால் இல்லாத பெண்ணைத் தொடுவதை விட அவ

ரது தலையில் இரும்பு ஊசியால் குத்துவதே மேல். அறிவிப்பவர்: மஅகல் பின் யஸார் (ரழி), நூல்: தப்ரானி

இச்செயல் நபி (ஸல்) அவர்கள் கூறியதுபோல கை செய்யும் விபச்சாரம் என்பதில் ஐயமில்லை. இப்னு மஸ்வூத் (ரழி) அறிவிக்கிறார்கள்: கண்கள் விபச்சாரம் செய்கின்றன, கைகள் விபச்சாரம் செய்கின்றன, கால்களும் விபச்சாரம் செய்கின்றன, மர்ம உறுப்பும் விபச்சாரம் செய்கின்றது என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். நூல்: அஹ்மத்

முஹம்மத் (ஸல்) அவர்களை விட தூய உள்ளம் கொண்டவர் உலகில் யாரேனும் உண்டா? அவ்வாறிருந்தும் 'நான் பெண்களிடம் முஸா∴பஹா செய்ய மாட்டேன்', 'பெண்களின் கரங்களைத் தொட மாட்டேன்.' என்றெல்லாம் கூறியுள்ளார்கள். அஹ்மத், தப்ரானியில் இதற்கு சான்றுள்ளது.

அண்ணலாரின் மனைவி ஆயிஷா (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: அல்லாஹ்வின் மீது ஆணையாகச் சொல்கிறேன், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் கரம் எந்தப் பெண்ணுடைய கரத்தின் மீதும் பட்டதே இல்லை. எனினும் வாய்மொழி மூலமே அவர்களிடம் (பெண்களிடம்) பைஅத் - உறுதிப் பிரமாணம் பெறுவார்கள். (முஸ்லிம்)

அறிந்து கொள்ளுங்கள்! சில கணவர்கள் அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளட்டும். அவர்கள் ஒழுக்கமுள்ள தம் மனைவியரை, தம் சகோதரர்களிடம் முஸா∴பஹா செய்யா விட்டால் விவாகரத்துச் செய்து விடுவதாக எச்சரிக்கின்றனர்.

இங்கு ஒரு விஷயத்தை அறிந்து கொள்வது அவசியமாகும். அதாவது திரைக்கு அப்பால் நின்று கொண்டு கையில் ஒரு துணியைப் போட்டுக் கொண்டு முஸா∴பஹாச் செய்தால் அது கூடும் என்றாகி விடாது. நேரடியாகச் செய்வது, துணியை வைத்துச் செய்வது ஆகிய இரண்டும் தடுக்கப்பட்டவை தான்.

## பெண்கள் நறுமணத்துடன் வெளியே சுற்றுதல்

ஒரு பெண் நறுமணம் பூசிக் கொண்டு அதன் வாடையை மக்கள் நுகர வேண்டுமென்பதற்காக அவர்களைக் கடந்து சென்றால் அவள் விபச்சாரியாவாள் (அஹ்மத்) என அல்லாஹ் வின் தூதர் (ஸல்) அவர்கள் கடுமையாக எச்சரித்திருந்தும் இன்றைய காலத்தில் இது மிக அதிகமாகக் காணப்படுகிறது. சில பெண்கள் இதை எந்த அளவுக்கு அலட்சியமாக, சாதார ணமாக எடுத்துக் கொண்டார்கள் எனில் வாசனைத் திரவி யங்களைத் தடவிக் கொண்டு தம்முடைய டிரைவர், வியாபாரி மற்றும் பள்ளிக்கூடத்தின் காவலாளி ஆகியோரின் அருகில் சர்வ சாதரணமாக செல்கின்றனர்.

ஆனால் வாசனைத் திரவியத்தைத் தடவிக் கொண்ட பெண் மீது எந்த அளவு ஷரீஅத் கடுமை காட்டியிருக்கிற தெனில் அத்தகைய பெண் வீட்டை விட்டு வெளியே செல்ல விரும்பினால் - பள்ளிக்குச் செல்வதாக இருந்தாலும் சரி - கடமையான குளிப்பைப் போன்று குளித்து விட்டுச் செல்ல வேண்டும். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: எந்தப் பெண் நறுமணம் பூசிக் கொண்டு பிறர் அந்த வாடை யை நுகர வேண்டுமென்பதற்காக பள்ளிக்குச் செல்கின்றா ளோ அவள் கடமையான குளிப்பைப் போன்று குளிக்காத வரை அவளுடைய தொழுகை ஏற்றுக் கொள்ளப்பட மாட் டாது. (அஹ்மத்)

திருமண வைபவங்களுக்கும், பெண்கள் நிகழ்ச்சிகளுக் கும் புறப்படும் முன் பெண்கள் வாசனைத் திரவியங்களைப் பயன்படுத்திவிட்டுச் செல்கின்றனர். மட்டுமல்ல அதிகம் மணம் கமழக்கூடிய வாசனைத் திரவியங்களைத் தடவிக் கொண்டு கடை வீதிகளில், வாகனங்களில், ஆண், பெண் கலந்திருக் கும் கூட்டங்களில், சபைகளில், ரமளான் இரவுகளில் பள்ளிக

ளுக்கும் கூட செல்கின்றனர்! இதனை நாம் அல்லாஹ்விடம் தான் முறையிட வேண்டியதிருக்கிறது.

பெண்கள் பயன்படுத்தும் வாசனைப் பொருள் மணம் உள்ளடங்கியும் நிறம் எடுப்பாகவும் இருக்க வேண்டும் என்று ஷரீஅத்தில் கூறப்பட்டுள்ளது. எல்லாம் வல்ல அல்லாஹ் நம்மீது கோபம் கொள்ளாமலும், அறிவீனர்களான ஆண்களோ பெண்களோ செய்கின்ற குற்றத்துக்காக நல்லோர்களான ஆண்களையும் பெண்களையும் தண்டிக்காமல் இருக்கவும் மேலும் நம் அனைவருக்கும் நேரான வழியை அவன் காட்டவும் நாம் பிரார்த்திப்போமாக!

## அந்நிய ஆணுடன் பெண் தனியே பயணித்தல்

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: மணமுடிப்பதற்கு விலக்கப்பட்ட ஆண் துணையுடன் அல்லாது ஒரு பெண் பயணம் செய்ய வேண்டாம். அறிவிப்பவர்: இப்னு அப்பாஸ் (ரழி), நூல்: புகாரி, முஸ்லிம். இத்தடை ஹஜ் எனும் புனிதப் பயணம் உட்பட எல்லாப் பயணங்களையும் உள்ளடக்கும். மணமுடிப்பதற்கு ஆகுமான- அந்நிய ஆணுடன் அவள் பயணம் செல்வது தீய மனிதர்களை அவளுடன் சில்மிஷங்கள் செய்யத் தூண்டும். பலவீனமான அவள் சில போது அதற்கு ஆட்பட வேண்டியது வரும். அல்லது குறைந்த பட்சம் அவளுடைய மானம் மரியாதைக்குக் களங்கமாவது ஏற்பட்டுவிடும்.

இது போன்றே அந்நிய ஆணுடன் ஒரு பெண் விமானத்தில் பயணமாவதும் ஹராமாகும். கணவனோ சகோதரனோ வழி அனுப்பி வைக்கத்தானே செய்கிறார். கணவனோ சகோதரனோ வரவேற்க வருகிறார் தானே என்று மக்கள் நினைக்கலாம் அப்போதும் அது கூடாததே! ஏனெனில் அவளுக்கு அடுத்த சீட்டில் அவளுடன் பயணம் செய்வர் யார்? (அந்நியன் தானே!) விமானத்தில் ஏதாவது கோளாறு ஏற்பட்டு வேறொரு

விமான நிலையத்தில் விமானம் தரை இறக்கப்பட்டாலோ விமானம் புறப்பட தாமதமாகி விட்டாலோ புறப்படும் நாள் மாறிவிட்டாலோ நிலமை என்னாவது? இது போன்ற சம்பவங்கள் ஏராளம் நடந்திருக்கின்றன.

மஹ்ரமான துணைக்கு நான்கு நிபந்தனைகள் உள்ளன. அவன் முஸ்லிமாக, பருவமடைந்தவனாக, புத்தி சீர் நிலையிலுள்ளவனாக, ஆணாக இருக்க வேண்டும். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியது போல. அல்லாஹ்வையும் மறுமையையும் நம்பக்கூடிய எந்தப் பெண்ணுக்கும் மூன்று அல்லது மூன்றுக்கு மேற்பட்ட நாட்கள் பயணமாவது ஹலால் இல்லை. அவளுடன் அவளுடைய தந்தையோ, மகனோ, கணவனோ, சகோதரனோ அல்லது அவன் மணமுடிப்பதற்கு விலக்கப்பட்ட (மஹ்ரமான) ஆண் துணை இருந்தாலே தவிர! நபிமொழி. அறிவிப்பவர்: அபூ ஸயீத் (ரழி), முஸ்லிம்

## அந்நியப் பெண்ணைப் பார்த்தல்

(நபியே!) நம்பிக்கை கொண்ட ஆண்களிடம், அவர்கள் தங்கள் பார்வையைத் தாழ்த்திக் கொள்ளும்படியும் தங்களுடைய வெட்கத்தலத்தைப் பாதுகாத்துக் கொள்ளும் படியும் நீர் கூறும். இதுவே அவர்களுக்கு மிகத் தூய்மையானதாகும். அவர்கள் செய்யும் அனைத்தையும் திண்ணமாக அல்லாஹ் நன்கு தெரிந்தவனாக இருக்கிறான். (24:30) கண்கள் செய்யும் விபச்சாரம் (விலக்கப்பட்டவைகளைப்) பார்ப்பதாகும் என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். (புகாரி)

மார்க்கம் அனுமதிக்கின்ற ஒரு அவசியத் தேவைக்காகப் பார்ப்பது விதிவிலக்காகும். உதாரணமாக ஒருவன் தான் மணமுடிக்க விரும்பும் பெண்ணைப் பார்ப்பது, மருத்துவர் நோயாளியைப் பாாப்பது போல. இவ்வாறே ஒரு பெண் அந்நிய ஆணை தவறான நோக்குடன் பார்ப்பதும் ஹராமாகும்.

அல்லாஹ் கூறுகிறான்: மேலும் (நபியே!) நம்பிக்கை கொண்ட பெண்களிடம் கூறும்: அவர்கள் தம் பார்வைகளைப் பேணிக் கொள்ளட்டும். தங்களுடைய வெட்கத்தலங்களைப் பாது காக்கட்டும். (24:31)

அது போல தாடி, மீசை முளைக்காத இளைஞனையும் அழகான வாலிபனையும் இச்சையுடன் பார்ப்பதும் விலக்கப் பட்டதாகும். ஒரு ஆண் இன்னொரு ஆணின் மர்மஸ்தானத் தையும் ஒரு பெண் இன்னொரு பெண்ணின் மர்மஸ்தானத்தை யும் பார்ப்பது ஹராமாகும். எந்த எந்த மர்ம உறுப்பைப் பார்ப் பது கூடாதோ அதைத் தொடுவதும் கூடாது. துணிக்கு மேல் தொட்டாலும் சரியே.

சிலர் செய்தித்தாள்களில், பத்திரிக்கைகளில், சினிமாக்க ளில் வரக்கூடிய (ஆபாசமான) படங்களை, அவை நிஜமல்லவே, வெறும் படங்கள் தானே எனும் அடிப்படையில் பார்ப்பது சாத் தானின் திருவிளையாடல் ஆகும். இவற்றில் தீமைகளும் காம உணர்வு தூண்டப்படுவதும் தான் இருக்கின்றன என்பது வெள் ளிடைமலை.

## மானம் இழந்திருத்தல்

அதாவது மனைவியைக் கூட்டிக் கொடுத்தல். இப்னு உமர் (ரழி) அறிவிப்பதாவது: மூன்று பேருக்கு அல்லாஹ் சுவனத்தை தடை செய்திருக்கின்றான். அவர்கள், மதுவுக்கு அடிமையான வன், பெற்றோரை நிந்திப்பவன், தன் மனைவியிடம் பிறர் மானக்கேடாக நடந்து கொள்வதை ஏற்றுக் கொள்ளும் அளவு மானம் இழந்தவன் ஆகியோராகும் என அல்லாஹ் வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறி னார்கள். (அஹ்மத்)

நமது காலத்தில் இதற்கு உதாரணமாவது:

வீட்டிலுள்ள மனைவி அல்லது மகளின் செயல்களைக் கண்டு கொள்ளாதிருத்தல். அவர்கள் அந்நிய ஆடவருடன்

தொலை பேசி மூலம் தொடர்பு கொண்டு பரஸ்பரம் காதல் உரையாடலைப் பகிர்ந்து கொள்கின்றனர். அதுபோல தம் வீட்டுப் பெண் ஒரு அந்நிய ஆணுடன் தனித்திருப்பதை அனுமதிப்பது, மேலும் வீட்டு டிரைவர் போன்ற அந்நிய ஆடவருடன் தனியாக அவளைப் பயணம் செய்ய விடுவது, இன்னும் பர்தா இல்லாமல் அவள் வெளியேறுவதை அனுமதிப்பது, அதனால் வருவோர் போவோரின் கண்களுக்கு அவள் விருந்தாக நேரிடும். மேலும் தீமைகள் மற்றும் ஆபாசங்களைப் பரப்புகின்ற பத்திரிக்கைகளையும், சினிமா கேசட்டுகளையும் வீட்டில் நுழைய விடுவது போன்றவையாகும்.

## வம்ச உறவை மாற்றுதல்

ஒரு முஸ்லிம் தன்னுடைய தந்தையை விடுத்து வேறொருவருடன் தன்னை இணைத்து நான் அவருடைய மகன் என்று சொல்வதோ இதுபோல தன்னுடைய குடும்பத்தை விடுத்து வேறொரு குடும்பத்துடன் தன்னை இணைத்துச் சொல்வதோ மார்க்கத்தில் கூடாததாகும். சிலர் உலக இலாபங்களுக்காக இப்படிச் செய்கின்றனர். பொய்யான இந்த உறவை அரசு ஆவணங்களில் கூட பதிவு செய்து விடுகின்றனர். இன்னும் சிலர் அவர்களுடைய தந்தை அவர்களை சிறு வயதிலேயே புறக்கணித்து, கவனிக்காமல் விட்டதற்காக தம் தந்தையின் மீதுள்ள வெறுப்பில் குரோதத்தில் இப்படிச் செய்யலாம். இவை யனைத்தும் விலக்கப்பட்டவையாகும். இதனால் திருமணம், வாரிசுரிமை போன்ற பல்வேறு பிரச்சனைகளில் பெரும் குழப்பங்கள் ஏற்படும். ஆதாரப்பூர்வமான நபிமொழியில் வந்திருப்பதாவது:

யார் தன்னுடைய தந்தையை விடுத்து வேறொருவருடன் தன்னை இணைத்துச் சொல்கிறாரோ அவருக்கு சுவர்க்கம் தடை செய்யப்பட்டதாகும் என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அபூபக்ரா (ரழி), (புகாரீ)

வம்ச உறவுகளை மாற்றக்கூடிய அல்லது அதில் பொய்யை இணைக்கக்கூடிய அனைத்து செயல்களும் மார்க்கத்தில் தடை செய்யப்பட்டவையாகும். சிலர் மனைவியுடன் தகராறு ஏற்படும் போது அவளைத் தேவிடியாத்தனம் செய்பவள் என்று திட்டி விடுகின்றனர். தம்முடைய குழந்தையைக் கூட தம் முடையதல்ல என எந்த ஆதாரமும் இன்றிக் கூறிவிடுகின் றனர். இன்னும் சில பெண்கள் கணவனுக்கு நம்பிக்கைத் துரோகம் செய்து விட்டு தவறான உறவால் அடுத்தவனின் கருவைச் சுமந்து தனது கணவனின் வம்ச உறவில் சேர்த்து விடுகின்றனர். நபிமொழியில் இது குறித்து கடுமையான எச்ச ரிக்கை வந்துள்ளது.

அபூஹுரைரா (ரழி) அறிவிக்கிறார்கள்: லிஆன் (ஒருவரையொ ருவர் சபித்தல்) சம்பந்தமான வசனம் (24:6-9) இறங்கியபோது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பின்வருமாறு கூறினார் கள்: ஒரு பெண் ஒரு குடும்பத்துக்குச் சம்பந்தமில்லாத (விபச் சாரத்தின் மூலம் உருவான கருவை அல்லது) குழந்தையை அக் குடும்பத்துடன் சேர்த்தால் அவளுக்கு இறைவனிடம் எந்த மதிப்பும் கிடையாது. மேலும் தனது சுவனத்தில் அல்லாஹ் அவளைச் சேர்க்க மாட்டான். (அதுபோல) ஒரு மனிதன் தன் னுடைய குழந்தை- அது அவனைப் பார்த்துக் கொண்டிருக் கும் நிலையில்- அது எனக்குப் பிறந்ததல்ல என மறுத்தால் அவனை விட்டும் அல்லாஹ் தூரமாகிவிடுகிறான். மேலும் (மறு மையில்) மனிதர்களில் முன்னோர் பின்னோர் அனைவரின் முன் னிலையில் அவனைக் கேவலப்படுத்துவான். (அபூதாவூத்)

## வட்டி வாங்குதல்

திருக்குர்ஆனில் அல்லாஹ், வட்டி வாங்குபவர்களைத் தவிர வேறு யாருடனும் போர்ப் பிரகடனம் செய்வதாக அறிவிக் கவில்லை. அல்லாஹ் கூறுகிறான்: நம்பிக்கை கொண்டோரே!

அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள், நீங்கள் நம்பிக்கையாளார்க ளாக இருப்பின் (உங்களுக்கு வரவேண்டிய) வட்டிப் பாக்கி களை விட்டு விடுங்கள். அவ்வாறு நீங்கள் செய்யாவிடின் அல்லாஹ்விடமிருந்தும் அவனுடைய தூதரிடமிருந்தும் (உங் களுக்கு எதிராக) போர் அறிவிக்கப்பட்டதென்பதை அறிந்து கொள்ளுங்கள். (2:278,279)

அல்லாஹ்விடம் இக்குற்றம் எந்த அளவுக்கு மோசமானது என்பதை விளக்குவதற்கு இவ்விரு வசனங்களே போதும்.

தனி நபர்கள் மற்றும் அரசாங்கங்களின் நிலையை சிந்தித் துப் பார்த்தால் வட்டியின் அடிப்படையிலான கொடுக்கல் வாங்கல் எவ்வளவு மோசமான விளைவுகளை ஏற்படுத்தி யிருக்கின்றது என்பதைப் புரிந்து கொள்ள முடியும். திவால், நஷ்டம், சந்தையில் தேக்க நிலை, கடனை நிறைவேற்ற முடி யாமை, பொருளாதார நெருக்கடி, வேலையில்லாத் திண்டாட் டத்தின் சதவிகிதம் அதிகரிப்பு, பல நிறுவனங்கள், கம்பெனி கள் இழுத்து மூடப்படுதல், நெற்றி வியர்வையை நிலத்தில் சிந்தி நாள் முழுதும் உழைத்துப் பெற்ற ஊதியத்தை வட்டிக் கடையில் வட்டியை அடைப்பதற்காக் கொட்டுவது, ஒரு சில ரிடத்தில் மட்டும் பெரும் செல்வம் குவிவதால் மனித சமுதா யத்தில் பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் (பெருமளவில்) உரு வாகுதல் இவையெல்லாம் வட்டியினால் ஏற்பட்ட மோசமான விளைவுகளாகும். வட்டி கொடுக்கல் வாங்கலில் ஈடுபட்டவர் களை அல்லாஹ் எத்தகைய போர் அறிவிப்பைக் கொண்டு எச்சரிக்கை செய்துள்ளானோ அத்தகைய போர் அறிவிப்பின் சில வடிவங்களாகக்கூட இவை இருக்கலாம்.

வட்டியில் ஈடுபடும் பிரதான நபர்கள்,இடைத்தரகர்கள், உதவி செய்பவர்கள் ஆகிய அனைவருமே முஹம்மத் (ஸல்) அவர்களின் நாவால் சபிக்கப்பட்டவர்களாவர். ஜாபிர் (ரழி) அவர்கள் அறி விப்பதாவது: வட்டி வாங்குபவனையும் வட்டி

கொடுப்பவனையும் அதற்கு கணக்கு எழுதுபவனையும், சாட்சியாக இருப்பவர்களையும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சபித்துள்ளார்கள், அக்குற்றத்தில் அவர்கள் அனைவரும் சமம் என்று கூறி யுள்ளார்கள். (முஸ்லிம்)

இந்த ஹதீஸின் அடிப்படையில் வட்டிக் கணக்கு எழுதுவது, அதை சரி பார்ப்பது, வாங்குவது, ஒப்படைப்பது, கொடுத்து வைப்பது, பாதுகாப்பது ஆக எந்த விதத்திலும் வட்டிக்கு உதவுவதும் அதில் கூட்டுச் சேர்வதும் ஹராமாகும். இப்பெரும் பாவம் எத்துணை மோசமானது என்பதை விளக்குவதில் நபி (ஸல்) அவர்கள் உண்மையில் ஆர்வம் காட்டியிருக்கிறார்கள்.

இப்னு மஸ்வூத் (ரழி) அறிவிக்கின்றார்கள்: வட்டி எழுபத்து மூன்று வகைகளைக் கொண்டது. அதில் மிகக் குறைந்த பாவம் ஒருவன் தன் தாயிடம் விபச்சாரம் செய்வதற்குச் சமமாகும். வட்டியில் மிகக் கொடியது ஒரு முஸ்லிமின் மானம் மரியாதைக்கு பங்கம் விளைவிப்பதாகும் என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறினார்கள். (ஹாகிம்)

மேலும் கூறினார்கள்: ஒருவன் அறிந்து கொண்டே ஒரு திர்ஹம் வட்டி உண்பது அறுபத்து மூன்று தடவை விபச்சாரம் செய்வதை விடக் கொடியது. அறிவிப்பவர்: அப்துல்லாஹ் பின் ஹன்ழலா (ரழி), நூல்: அஹ்மத்

பொதுவாக வட்டி எல்லோருக்கிடையிலும் எல்லா நிலையிலும் ஹராமாகும். சிலர் எண்ணுவது போல் பணக்காரர்களுக்கும் ஏழைகளுக்கும் மத்தியில் தான் ஹராமாகும் என்பதல்ல. எத்தனையோ செல்வந்தர்கள், பெரும் பெரும் வியாபாரிகள் வட்டியினால் அனைத்தையும் இழந்து ஆண்டியானதுண்டு. யதார்த்தம் இதற்கு சான்று பகர்கின்றது.

வட்டியினால் விளையும் குறைந்தபட்சத் தீங்கு யாதனில், அது செல்வத்திலுள்ள பரக்கத்தை- அபிவிருத்தியை அழித்து

விடும். செல்வம் என்னதான் எண்ணிக்கையில் அதிகமாக இருந்தாலும் சரியே. நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: வட்டிப் பொருள் எவ்வளவு அதிகம் இருந்தாலும் அதன் முடிவு நஷ்டமாகவே அமையும். அறிவிப்பவர்: இப்னு மஸ்வூத் (ரழி), நூல்: ஹாகிம்

அதுபோல வட்டி அது கூடுதலாக இருந்தால் தான் ஹராம் என்றல்ல, கூடுதலாக இருந்தாலும் சரி குறைவாக இருந்தாலும் சரி அனைத்துமே ஹராமாகும். வட்டி உண்டவன் மறுமையில் ஷைத்தானால் தீண்டப்பட்டு பைத்தியங்கொண்டவன் எழுவது போல் மண்ணறையிலிருந்து எழுவான். இவ்வளவு மோசமான பாவமாக இது இருந்தும் இதற்கு தவ்பா - பாவ மீட்சி உண்டு என அல்லாஹ் அறிவித்துள்ளான். அதன் முறையை அவன் விளக்கியுமுள்ளான்.

வட்டி வாங்குபவர்களை நோக்கி அல்லாஹ் கூறுகிறான்: நீங்கள் பாவமன்னிப்புக் கோரி (வட்டியைக் கை) விட்டால் உங்களுடைய மூலதனம் உங்களுக்கே உரியது. நீங்கள் அநீதி இழைக்கக் கூடாது. உங்கள் மீதும் அநீதி இழைக்கப்பட மாட்டாது. (2:279) இதுவே அசல் நீதியாகும்.

ஒரு முஃமினின் உள்ளம் இப்பெரும் பாவத்தை வெறுக்க வேண்டும். அது எத்துணை மோசமானது என்பதை உணர வேண்டும். எந்த அளவுக்கென்றால் நிர்பந்தமாக, பொருள் வீணாகிவிடும் அல்லது திருடு போய்விடும் என்ற அச்சத்தில், வட்டியின் அடிப்படையில் இயங்கும் வங்கியில் பணம் வைத்திருப்பவர்கள் நிர்ப்பந்தமாகத்தான் இவ்வாறு செய்கிறோம் என்றும் இது செத்த பிண்டத்தை அல்லது அதை விட மோசமானதை உண்பதைப் போன்றது என்றும் நாம் அவசியம் உணர வேண்டும். அத்துடன் அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோர வேண்டும். மேலும் முடிந்த வரை இதற்கு மாற்றுப் பரிகாரம் காண முயல வேண்டும்.

வங்கிகளில் வட்டியை அவர்கள் கேட்டு வாங்கக் கூடாது. மாறாக அவர்களின் கணக்குகளில் வட்டி ஏற்றப்பட்டுவிட்டால் ஏதேனும் ஆகுமான காரியத்தில்- தர்மமாக அல்லாமல் அதிலி ருந்து விடுபட்டால் போதும் என்று- அதைச் செலவு செய்திட வேண்டும். ஏனெனில் அல்லாஹ் தூய்மையானவன், தூய்மை யானதைத் தவிர வேறு எதையும் ஏற்றுக் கொள்ள மாட்டான். மட்டுமல்ல எந்த விதத்திலும் அந்த வட்டித் தொகையைப் பயன்படுத்துவது அவர்களுக்கு ஆகு மானதல்ல. உண்பதற் கோ, பருகுவதற்கோ, உடுத்துவதற்கோ, வாகனத்திற்கோ, வீட்டிற்கோ அல்லது பெற்றோர், மனைவி, மக்கள் ஆகியோ ருக்குச் செய்ய வேண்டிய கடமையான செலவுகளுக்கோ அல்லது ஸகாத் கொடுப்பதற்கோ, வரி செலுத்துவதற்கோ அல்லது தனக்கு நேரவிருந்த ஒரு அநீதியைத் தடுப்பதற்கோ எதற்கும் பயன்படுத்தக் கூடாது. அல்லாஹ்வின் தண்டனைக் கஞ்சி வட்டியிலிருந்து அவன் விலகிக் கொள்ள வேண்டும்.

## விற்பனைப் பொருளின் குறைகளை மறைத்தல்

ஒரு உணவுக் குவியலின் பக்கம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) சென்றார்கள். அதில் அவர்கள் தமது கையை நுழைத்த போது அவர்களுடைய விரல்களில் ஈரம் பட்டது. உணவு வியா பாரியே! என்ன இது? என்று வினவினார்கள். அதற்கு அவர் அல்லாஹ்வின் தூதரே! மழை நீர் பட்டு விட்டது என்று பதில ளித்தார். மக்கள் பார்க்கும் விதமாக உணவுப் பொருளின் மேற்பகுதியில் அதைப் போட்டிருக்க வேண்டாமா? யார் ஏமாற் றுகிறாரோ அவர் நம்மைச் சார்ந்தவரல்ல என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அபூஹுரை ரா (ரழி), நூல்: முஸ்லிம்

இறையச்சமில்லாத பெரும்பாலான வியாபாரிகள், பொரு ளின் குறையை மறைக்க பல விதத்திலும் முயலுகின்றனர்.

அதன் மீது டேப் ஒட்டிவிடுகின்றனர். அல்லது அதை பெட்டி யின் அடியில் போட்டு விடுகின்றனர். அல்லது ஏதாவது ரசாய னத்தைப் பயன்படுத்தி அழகுபடுத்தி விடுகின்றனர். அல்லது இஞ்சினின் ஆரம்ப சத்தத்தில் எழக்கூடிய குறையை மறைத்து விடுகின்றனர். குறைகளுடைய பொருளை ஒருவன் வாங்கிச் சென்றால் அது சீக்கிரம் பழுதாகி விடுகின்றது. இன் னும் சிலர் பொருள் காலாவதி ஆவதனுடைய தேதியை மாற்றி விடுகின்றனர். அல்லது பொருளைப் பார்ப்பதற்கோ பரிசோ திப்பதற்கோ அனுமதிப்பதில்லை. வாகனங்களை அல்லது கருவிகளை விற்பவர்களில் பெரும்பாலோர் அவற்றின் குறை களைத் தெளிவுபடுத்துவதில்லை. இவை யாவும் விலக்கப் பட்டவையாகும்.

அண்ணல் நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்: ஒரு முஸ்லிம் பிற முஸ்லிமுக்குச் சகோதரனாவான். தன் சகோதரனுக்கு குறையுள்ள பொருளை விற்கின்ற எந்த முஸ்லிமுக்கும் அதைத் தெளிவுபடுத்தாமலிருப்பது ஹலால் இல்லை. அறிவிப் பவர்: உக்பா பின் ஆமிர்(ரழி), நூல்: இப்னுமாஜா

சிலர் கருதுகின்றனர்: வாகனங்களை ஏலம் விடும் போது நான் இரும்புகளை விற்கப் போகிறேன் என்று மக்களிடம் கூறி விட்டால் தம்முடைய பொறுப்பு நீங்கிவிடும். (பழுதான வாக னங்களை விற்ற குற்றம் வராது) இப்படிப்பட்ட வியாபாரம் அல்லாஹ்வின் தூதர்(ஸல்)அவர்கள் கூறியது போல அபிவிருத் தியை- பரக்கத்தை அழித்து விடக்கூடியதாகும்.

விற்பவரும் வாங்குபவரும் (அவ்விடத்தை விட்டும்) பிரிந்து செல்லாத வரை வியாபாரத்தை ரத்து செய்ய உரிமை பெற்ற வா..வர். அவ்விருவரும் உண்மை கூறி (எதையும் மறைக்காது) தெளிவுபடுத்தினால் அவர்களுடைய வியாபாரத்தில் அவர்க ளுக்கு அபிவிருத்தி அளிக்கப்படும். அவ்விருவரும் பொய் கூறி எதையேனும் மறைத்தால் அவர்களின் வியாபாரத்தில் அபி

விருத்தி அழிக்கப்படும். (நபிமொழி) அறிவிப்பவர்: ஹகீம் பின் ஹிஸாம் (ரழி), நூல்: புகாரி

## நஜஷ்-வியாபாரத்தில் வஞ்சித்தல்

நஜஷ் என்பது பொருளை வாங்காத ஒருவர் (இவர் வியா பாரியால் நிறுத்தப்பட்டிருப்பார்) அதன் விலையை அதிகப் படுத்துவதாகும். பிறரை ஏமாற்றுவதும் படிப்படியாக அதிக விலைக்கு அவரைக் கொண்டு செல்வதும் தான் இதன் நோக் கமாக இருக்கும். நீங்கள் வஞ்சக வியாபாரம் செய்யாதீர்கள் என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரழி), நூல்: புகாரி.

இது ஒருவகையான ஏமாற்றுதலாகும் என்பதில் ஐயமில் லை. திண்ணமாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறி யுள்ளார்கள்: சதி செய்வதும் ஏமாற்றுவதும் நரகிற்கு கொண்டு செல்லும் காரணிகளில் உள்ளவையாகும். அறிவிப்பவர்: கைஸ் பின் ஸஅத் (ரழி), நூல்: பைஹகீ

வியாபாரச் சந்தைகளிலும் ஏலம் நடக்கின்ற இடங்களிலும் மற்றும் வாகனக் கண்காட்சிகளிலும் உள்ள பெரும்பாலான தரகர்கள் விலக்கப்பட்ட காரியங்களை அதிகம் செய்வதால் அவர்களின் சம்பாத்தியம் ஹராமானதாகும். மேலே சொன்ன நஜஷ் எனும் வஞ்சகமான வியாபாரத்திற்கு அவர்கள் உடன் படுவதும் ஹராமான சம்பாத்தியமே. மேலும் வெளியே இருந்து வரும் வாடிக்கையாளர்களிடம் அல்லது வியாபாரியிடம் ஆசை வார்த்தை கூறி ஏமாற்றுவதும் ஹராமானதே. (சரக்கு வியாபா ரியினுடையதாக இருந்தால் அவரை ஏமாற்றி) சரக்கின் விலை யைக் குறைத்து விடுகின்றனர். ஆனால் இந்த தரகர்களுக்குச் சொந்தமானதாக சரக்காக இருந்தால் விலையை ஏற்றிவிடு கின்றனர். வாடிக்கையாளர்களையும் வியாபாரிகளையும் வஞ் சிக்கிறார்கள். ஏலத்தில் விலையை அதிகரிக்கின்றனர். இவ்

வாறாக இத்தரகர்கள் மனிதர்களை ஏமாற்றி அவர்களுக்கு தீங்கிழைக்கின்றனர்.

## ஜும்ஆவின் பாங்கிற்குப் பிறகு வியாபாரம் செய்தல்

அல்லாஹ் கூறுகிறான்: இறைநம்பிக்கை கொண்டோரே! ஜும்ஆ நாளில் தொழுகைக்காக அழைக்கப்படும் போது அல்லாஹ்வை நினைவு கூர்வதின் பக்கம் விரைந்து செல் லுங்கள். வியாபாரத்தை விட்டுவிடுங்கள். நீங்கள் அறிந்தவர் களாக இருந்தால் இது உங்களுக்கு சிறந்ததாகும். (62:9)

சிலர் இரண்டாம் பாங்கு கூறப்பட்ட பிறகும் கடைகளில் வியாபாரம் செய்கின்றனர். அல்லது பள்ளிகளுக்கு முன்னால் தொடர்ந்து பொருட்களை விற்கிறார்கள். அவர்களிடம் வாங் குபவர்களும் பாவத்தில் கூட்டாகின்றனர். மிஸ்வாக் குச்சியை வாங்கினாலும் சரியே. அறிஞர்களின் சரியான கூற்றின்படி இத் தகைய வியாபாரம் தவறானதாகும். ஹோட்டல்கள், பேக்கரி கள் மற்றும் தொழிற்சாலைகளின் உரிமையாளர்கள் சிலர் தங்கள் பணியாளர்களை ஜும்ஆ தொழுகையின் நேரத்தில் வேலை செய்தாக வேண்டும் என நிர்ப்பந்திக்கின்றனர். வெளிப்படையில் இத்தகையோரின் இலாபம் அதிகரித்தாலும் உண்மையில் அவர்களுக்கு நஷ்டம் தான் அதிகரிக்கின்றது. ஆனால் பணிபுரியக்கூடியவர்கள் நபி(ஸல்)அவர்களின் பொன் மொழியின் தேட்டத்திற்கேற்ப செயல்படுவது அவசியமாகும். அல்லாஹ்வுக்கு மாறு செய்யும் விஷயத்தில் மனிதனுக்குக் கட்டுப்படக்கூடாது என்பது நபிமொழி. (அஹ்மத்)

## சூதாட்டம்

அல்லாஹ் கூறுகிறான்: ஈமான் கொண்டவர்களே! மது, சூதாட்டம், பலி பீடங்கள், குறி பார்க்கும் அம்புகள் ஆகியவை

அருவருக்கத்தக்க ஷைத்தானியச் செயல்களாகும். அவற்றைத் தவிர்த்துக் கொள்ளுங்கள். அதன் மூலம் நீங்கள் வெற்றி பெறலாம். (5:90)

அறியாமைக் காலத்து மக்களிடம் சூதாட்டம் பல விதங்களில் இருந்திருக்கிறது. அவர்களிடம் பிரபலமான ஒரு விதம் வருமாறு: ஓர் ஒட்டகத்தில் பத்து பேர் சம அளவில் பங்கு கொள்வர். பிறகு அம்புகள் மூலம் சீட்டுக் குலுக்கிப் போட்டு ஏழு பேர்கள் மட்டும் அவர்களுக்கு நிர்ணயிக்கப்பட்ட பங்குகளை எடுத்துக் கொள்வர். எஞ்சியுள்ள மூன்று பேர்களுக்கு ஒன்றும் கிடைக்காது.

நமது காலத்தில் சூதாட்டம் பல விதத்தில் நடக்கின்றது. அவற்றுள் சில:

1. லாட்டரி: இதில் பல வகைகள் உள்ளன. சாதாரணமாக நடைமுறையில் உள்ளது இதுதான். அதாவது பணம் கொடுத்து பரிசுச் சீட்டுகளை வாங்கிக் கொள்வார்கள். குறிப்பிட்ட தேதியில் அந்தப் பரிசுச் சீட்டுகளின் பேரில் குலக்கல்கள் நடைபெறும். முடிவில் வெற்றி பெறுவோருக்கு முதல் பரிசு, இரண்டாம் பரிசு, மூன்றாம் பரிசு என (ஆயிரங்கள் முதல் கோடிகள் வரை) பரிசுத் தொகை கிடைக்கும். இதற்கு அவர்கள் என்ன பெயரை வைத்துக் கொண்டாலும் இது ஹராம் தான்.

2. ஏதேனும் ஒரு பொருளை பணம் கொடுத்து வாங்குவது. அதனுள் என்ன இருக்கிறதென்றே தெரியாது. அல்லது ஒரு பொருளை வாங்கும் போது அதற்கு ஒரு நம்பர் அல்லது சீட்டுக் கொடுக்கப்படும். பிறகு அதன் பேரில் குலுக்கல் நடைபெறும். அதிர்ஷ்டசாலிகளைத் தேர்ந்தெடுத்து அவர்களுக்குப் பரிசுகள் வழங்கப்படும்.

3. நமது காலத்திலுள்ள சூதாட்ட வகைகளில் வணிக இன்சூரன்சும் ஒன்றாகும். ஆயுள் இன்சூரன்ஸ், வாகன இன்சூரன்ஸ், சரக்குகளுக்கு இன்சூரன்ஸ், நெருப்பினால் ஏற்படக் கூடிய இழப்புகளின் ஈட்டுக்கு இன்சூரன்ஸ், பொது இன்சூரன்ஸ், பிறரின் தீங்கிலிருந்து பாதுகாக்க இன்சூரன்ஸ் இப்படி பலவகையான இன்சூரன்ஸ்கள் உள்ளன. எந்த அளவுக்கெனில் சில பாடகர்கள் தங்களின் குரலுக்கும், சில விளையாட்டு வீரர்கள், நடிகைகள் தங்களின் சில உறுப்புகளுக்கும் இன்சூரன்ஸ் செய்து கொள்கின்றனர்.

மேற்கூறப்பட்ட முறைகளைத் தவிர இன்னும் பல முறைகள் உள்ளன. அவையனைத்தும் சூதாட்டத்தில் அடங்கும். இன்று சூதாட்டத்திற்கென தனிப்பட்ட கிளப்கள், சங்கங்கள் இருக்கின்றன. அங்கு இப்பெரும் பாவத்தைச் செய்வதற்குத் தனிப்பட்ட பச்சை நிற மேஜைகள் உள்ளன. அது போல கிரிக்கட், கால் பந்து போன்ற விளையாட்டுப் போட்டிகளில் பந்தயம் கட்டுவதும் ஒரு வகை சூதாட்டமே! அதுபோல சில விளையாட்டு அரங்கங்களிலும் பொழுது போக்கு மையங்களிலும் சூதாட்டத்தின் அடிப்படையிலான பல்வேறு விளையாட்டுக்கள் நடைபெறுகின்றன. போட்டிகளிலும் பந்தயங்களிலும் சூதாட்டங்கள் உள்ளன. போட்டிகள் மூன்று வகைப்படும்.

1. மார்க்க அடிப்படையிலான போட்டிகள். இத்தகைய போட்டிகள் பரிசுகளுடனோ அல்லது பரிசுகள் இல்லாமலோ நடத்தப்படுவது ஆகுமானதாகும். உதாரணமாக ஒட்டகப் பந்தயங்கள், குதிரைப் பந்தயங்கள், துப்பாக்கி சுடும் போட்டிகள், குறிபார் (த்து இலக்கைத் தா) க்கும் போட்டிகள் போன்றவையாகும். (இத்தகைய பயிற்சிகள் அறப்போருக்கு உதவும்) இத்தகைய போட்டிகளில் - அறிஞர்களின் சரியான சொல்லின் பிரகாரம் - திருக் குர்ஆனை மனனம் செய்தல் போன்ற கல்விப் போட்டிகளும் அடங்கும்.

2. தன் அளவில் ஆகுமான போட்டிகள்: எடுத்துக்காட்டாக: கால் பந்து போன்ற போட்டிகள், ஓட்டப்பந்தயங்கள். ஆனால் தொழுகையை வீணாக்குதல், மறைக்க வேண்டிய பகுதியை மறைக்காத வகையில் அறை குறை ஆடை அணிதல் போன்ற ஹராமான காரியங்களை விட்டும் இவை நீங்கியிருக்க வேண்டும். பந்தயம் கட்டாமல் இத்தகைய போட்டிகள் நடத்தப்பட்டால் அவை கூடும்.

3. தன் அளவில் ஹராமான அல்லது ஹராமின் பக்கம் சேர்க்கக்கூடிய போட்டிகள்: உதாரணம்: அழகிப்போட்டிகள், முகத்தைக் காயப்படுத்தக்கூடிய குத்துச் சண்டைப் போட்டிகள், அதுபோல கொம்புள்ள கால்நடைகளை மோதவிடுதல், சேவல்களை மோத விடுதல் போன்ற போட்டிகள் அனைத்தும் விலக்கப்பட்டவையாகும்.

## திருடுதல்

அல்லாஹ் கூறுகிறான்: திருடுபவர் ஆணாயினும் சரி, பெண்ணாயினும் சரி அவர்களின் கரங்களைத் துண்டித்து விடுங்கள். இது அவர்களுடைய சம்பாதனைக்கான கூலியாகும். மேலும் அல்லாஹ் வழங்கும் படிப்பினை மிக்க தண்டனையுமாகும். அல்லாஹ் யாவற்றையும் மிகைத் தோனும் நுண்ணறிவுள்ளோனுமாவான். (5:38)

திருட்டுக் குற்றங்களில் மிகப்பெரும் குற்றம் பழமையான அல்லாஹ்வின் ஆலயத்தை ஹஜ் மற்றும் உம்ரா செய்பவர்களிடம் திருடுவதாகும். இத்தகைய திருடர்கள் இப்புவியின் மிகச் சிறந்த இடமான மஸ்ஜிதுல் ஹராமிலும் அதைச் சுற்றிய இடங்களிலும் கூட அல்லாஹ்வின் வரம்புகளுக்கு எந்த மதிப்பும் அளிப்பதில்லை. சூரிய கிரகணத் தொழுகை பற்றிய ஹதீஸில் நபி(ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்: நரகம் என்னிடம் கொண்டு வரப்பட்டது. எப்போதெனில் அதன் ஜுவாலை என்

மீது பட்டுவிடுமோ என அஞ்சி நான் (தொழுகையில்) சற்று பின்னால் நகர்ந்ததை நீங்கள் பார்த்த சமயத்தில் (கொண்டு வரப்பட்டது).

அப்போது அங்குசத்தை வைத்திருக்கும் ஒருவன் நரகில் தன்னுடைய குடலை இழுத்துச் செல்வதைக் கண்டேன். தன்னுடைய அங்குசத்தைக் கொண்டு ஹாஜிகளிடம் திருடியவன்தான் அவன். ஹாஜிக்கு இது தெரிந்து விட்டால், உங்கள் சாமான் என்னுடைய அங்குசத்தில் தெரியாமல் கொழுவிக் கொண்டது என்று(சமாதானம்) கூறிவிடுவான். ஹாஜிக்கு இது தெரியா விட்டால் சாமானை எடுத்துச் சென்று விடுவான். (முஸ்லிம்)

பொதுச் சொத்தைத் திருடுவது மோசமான திருட்டாகும். இதைச் செய்பவர்களில் சிலர், மற்றவர்கள் செய்வது போலவே நாங்களும் செய்கிறோம் என்று கூறுகின்றார்கள். இது எல்லா மக்களிடமிருந்தும் திருடுவது என்பதை அவர்கள் உணர்வதில்லை. ஏனென்றால் பொதுச் சொத்து என்பது மக்கள் எல்லோருக்கும் சொந்தமானது. இறையச்சமில்லாதவர்களுடைய இத்தகைய செயலை மற்றவர்கள் செய்கிறார்கள் என்பதைக் காட்டி நியாயப்படுத்த முடியாது.

இன்னும் சிலர் காபிர்களுடைய சொத்தை- அவர்கள் காபிர்களாக இருக்கின்றார்கள் என்பதை ஆதாரமாகக் கொண்டு - திருடுகின்றனர். இதுவும் சரியல்ல. ஏனெனில் எந்தக் காபிர்கள் முஸ்லிம்களுடன் போர் தொடுக்கின்றார்களோ அவர்களுடைய சொத்துக்கள் தான் முஸ்லிம்களுக்கு ஆகுமானதே தவிர அனைத்து காஃபிர்களுடைய சொத்துக்கள், நிறுவனங்கள், கம்பெனிகள் ஆகுமானவை அல்ல.

திருடக்கூடிய வழிமுறைகளில் சில: அடுத்தவர்களுடைய சட்டைப் பையில் அவர்களுக்குத் தெரியாமல் கையைப் போட்டு (பிட்பாக்கட் அடித்து) விடுகின்றனர். சிலர் அடுத்தவர்

களின் வீட்டில் அவர்களை சந்திக்கும் நோக்கில் நுழைந்து திருடிவிடுகின்றனர். இன்னும் சிலர் விருந்தாளிகளுடைய பை களில் திருடிவிடுகின்றனர். வேறு சிலர் வியாபாரஸ்தலங்களில் நுழைந்து அங்குள்ள பொருள்களை தம்முடைய சட்டைப் பைகளில் அல்லது ஆடைகளில் மறைத்து விடுகின்றனர். சில பெண்கள் கூட இவ்வாறு செய்கின்றனர்.

இன்னும் சிலர் குறைவான அல்லது அற்பமான பொருட் களைத் திருடுவதை இலேசாகக் கருதுகின்றனர். ஆனால் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் திருடுபவனை அல்லாஹ் சபிப்பானாக! (ஒரு) முட்டையைத் திருடினாலும் அவனுடைய கை துண்டிக்கப்படும். கயிற்றைத் திருடினாலும் அவனுடைய கை துண்டிக்கப்படும் எனக் கூறியுள்ளார்கள்.
அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரழி), நூல்: புகாரி.

ஒருவன் ஒரு பொருளைத் திருடி விட்டால் அல்லாஹ்விடம் அவன் பாவமன்னிப்புக் கோருவதும் அப்பொருளை உரியவ ரிடம் திருப்பிக் கொடுப்பதும் அவசியமாகும். பகிரங்கமாக அவரிடம் கொடுத்தாலும் சரி அல்லது தனிப்பட்ட முறையில் இரகசியமாக அவரைச் சந்தித்துக் கொடுத்தாலும் சரி. அல் லது வேறொரு ஆள் மூலமாகத் திருப்பிக் கொடுத்தாலும் சரி. ஆனால் உரியவரிடமோ அல்லது அவருடைய மறைவுக்குப் பின் அவருடைய வாரிசுகளிடமோ அப்பொருளை ஒப்படைக்க முடியவில்லையெனில், அவரைத் தேடுவதில் மிகுந்த முயற்சி எடுத்தும் இயலவில்லையெனில் உரியவர் பேரில் அப்பொ ருளை தர்மம் செய்துவிட வேண்டும். அதற்கான கூலி உரிய வருக்குக் கிடைக்க எண்ணிக் கொள்ள வேண்டும்.

## லஞ்சம் கொடுப்பதும், வாங்குவதும்

உரிமையை அழிப்பதற்கோ பொய்யைச் செல்லுபடியாக்கு வதற்கோ- மக்களிடையே தீர்ப்புச் சொல்லக்கூடிய நீதிபதிக்கு

இலஞ்சம் கொடுப்பது குற்றமாகும். காரணம் இது தீர்ப்பில் நேர்மை தவறுவதற்கும் நியாயம் கிடைக்க வேண்டியவர்க ளுக்கு அநீதி இழைப்பதற்கும் இட்டுச் செல்லும். மேலும் இது குழப்பத்தை உருவாக்கும். அல்லாஹ் கூறுகிறான்: மேலும் நீங்கள் ஒருவர் மற்றவரின் பொருளை தவறான முறையில் உண்ணாதீர்கள், மேலும் பிற மனிதர்களுடைய பொருள்களில் ஏதேனும் ஒரு பகுதியை அநீதமான முறையில் தின்பதற்காக - அது தவறு என நீங்கள் அறிந்திருந்தும் - அதற்குரிய வாய்ப் பைப் பெற அதிகாரிகளை அணுகாதீர்கள். (2:188)

(ஒரு விவகாரத்தில்) தீர்ப்புப் பெறுவதற்காக இலஞ்சம் கொடுப்பவனையும் லஞ்சம் வாங்குபவனையும் அல்லாஹ் சபிப்பானாக! என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறி னார்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரழி), நூல்: அஹ்மத்

ஆனால் நீதியை அடைவதோ அநீதியைத் தடுப்பதோ லஞ் சம் கொடுக்காமல் சாத்தியமாகாதெனில் இத்தகைய (நிர்ப்பந் தமான) சூழ்நிலையில் லஞ்சம் கொடுப்பவன் இந்த எச்சரிக் கையில் சேரமாட்டான்.

இந்தக் காலத்தில் லஞ்சம், பெருமளவு பெருகிவிட்டது. எந்த அளவுக்கு எனில் சில ஊழியர்களுக்கு அவர்களுடைய ஊதியத்தை விடக் கூடுதல் வருமானமாக லஞ்சம் ஆகிவிட் டது. அது மட்டுமல்ல பல கம்பெனிகளுடைய வரவு, செலவு கணக்கு (பட்ஜட்) களில் பல்வேறு (மறைமுகமான) பெயர்களில் இலஞ்சம் கொடுக்கல், வாங்கல் பதிவு செய்யப்படுகிறது. பெரும்பாலான கொடுக்கல், வாங்கல்கள் எப்படி மாறிவிட்டன என்றால் அவை ஆரம்பமாகுவதும் இலஞ்சம் மூலமாகத்தான் முடிவதும் இலஞ்சம் மூலமாகத்தான். அதனால் ஏழைகள் பெரும் துன்பங்களுக்கு ஆளாகின்றனர். இதனால் (மனிதர்க ளிடம் ஒப்படைக்கப்பட்ட) பல்வேறு பொறுப்புக்கள் பாழாகி விட்டன. தொழிலாளிகள் கெட்டுப் போவதற்கும் அதனால்

முதலாளிகள் நஷ்டமடைவதற்கும் இதுதான் காரணம். அது மட்டுமல்ல லஞ்சம் கொடுப்பவருக்குத் தான் வேலை சிறப் பாக முடித்துக் கொடுக்கப்படுகிறது. எவர் லஞ்சம் கொடுக்க வில்லையோ அவருடைய வேலை சிறப்பாக முடித்துக்கொடுக் கப்படுவதில்லை. அல்லது அவருடைய வேலை தாமதப்படுத் தப்படுகிறது.

லஞ்சம் கொடுத்தவர்கள் லஞ்சம் கொடுக்காதவர்களுக் குப் பிறகு வந்தும் அவர்களுக்கு வெகு முன்பாகவே வேலை யை முடித்து விட்டுச் சென்று விடுகின்றனர். முதலாளிகளுக் குச் சேர வேண்டிய பணங்கள் லஞ்சம் காரணமாக முகவர் களின் பாக்கட்டுகளில் சேர்ந்து விடுகிறது. இதுபோன்ற கார ணங்களால் தான் இந்தத் தீமையிலும் இது சம்பந்தப்பட்ட வற்றிலும் பங்கு பெறுபவர்களை அல்லாஹ் தனது அருளை விட்டும் தூரமாக்கட்டும் என நபி(ஸல்)அவர்கள் சபித்திருப்ப தில் ஆச்சரியமில்லை.

அப்துல்லாஹ் பின் அம்ர்(ரழி)அறிவிக்கிறார்கள்: லஞ்சம் கொடுப்பவர் மீதும் லஞ்சம் வாங்குபவர் மீதும் அல்லாஹ்வின் சாபம் உண்டாகட்டுமாக! என அல்லாஹ்வின் தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். (இப்னுமாஜா)

## நிலத்தை அபகரித்தல்

இறையச்சம் இல்லாமல் போய் விடுமானால் சக்தியும் உபா யமும் அவற்றைப் பெற்றிருப்பவர்களுக்கே கேடாகிவிடுகிறது. அவற்றை,பிறரின் பொருள்களை அபகரிப்பது போன்ற அக்கிர மத்திற்குப் பயன்படுத்துகிறார்கள். இந்த அக்கிரமத்தைச் சார்ந்தது தான் நிலங்களை அபகரித்தல். இதன் முடிவு மிகப் பெரும் துன்பத்தில் கொண்டு போய் சேர்த்து விடும்.

ஒரு ஜாண் அளவு நிலத்தை அநியாயமாக ஒருவன் அபக ரித்தால் இறுதி நாளில் அவன் ஏழு பூமிக்கடியில் அமிழ்த்தப்

படுவான் என்பது நபிமொழி. அறிவிப்பவர்: இப்னு உமர் (ரழி), நூல்: புகாரி. ஒருவன் ஒரு ஜாண் நிலத்தை அநியாயமாக அபகரித்தால் மறுமையில் அதை ஏழு பூமிகளின் இறுதி வரைத் தோண்டும் படி அல்லாஹ் அவனை ஏவுவான். பின்னர் மக்களிடையே தீர்ப்புச் செய்யப்படும் வரை (அவன் அபகரித்த) அந்த நிலத்தை அவனுடைய கழுத்தில் மாலையாக அணிவித்து விடுவான் என்பதும் நபிமொழி. அறிவிப்பவர்: யஃலா பின் முர்ரா (ரழி), நூல்: அஹ்மத்.

தப்ரானியின் அறிவிப்பில் ...மறுமையில் அதை ஏழு பூமிகளின் அடிப்பாகம் வரைக் கொண்டு வரும்படி அல்லாஹ் அவனை ஏவுவான்... என்று உள்ளது.

நில அடையாளக் கல்லை, நிலத்தின் எல்லைகளை மாற்றி அண்டை வீட்டாரின் நிலத்தை தன் நிலத்தோடு சேர்த்து விசாலப்படுத்திக் கொள்வதும் இதில் அடங்கும். பின்வரும் நபிமொழியும் இதையே சுட்டிக்காட்டுகின்றது.

நில அடையாளக் கல்லை மாற்றுபவனை அல்லாஹ் சபிப்பானாக! என நபி (ஸல்) கூறினார்கள். அறிவிப்பவர்: அலீ (ரழி), நூல்: முஸ்லிம்

## பரிந்துரைக்காக அன்பளிப்புப் பெறுதல்

மக்களிடையே பெறும் செல்வாக்கும் அந்தஸ்தும் ஒரு மனிதனுக்கு அல்லாஹ் வழங்கிய அருட்கொடையாக எப்பொழுது ஆகுமெனில் அதற்காக அவன் நன்றி செலுத்தும் போது தான். முஸ்லிகளுக்கு நன்மை செய்வதற்காக இந்த செல்வாக்கைப் பயன்படுத்துவது இவ்வருட்கொடைக்கு நன்றி செலுத்துவதாக அமையும். ஏனெனில் 'உங்களில் யாரேனும் தன் சகோதரனுக்கு நன்மை செய்ய முடிந்தால் செய்யட்டும்' என நபி (ஸல்) அவர்கள் பொதுவாகக் கூறியிருப்பதில் இது

அடங்குகிறது. இந்நபிமொழி ஜாபிர் பின் அப்துல்லாஹ் (ரழி) அவர்கள் அறிவிக்க முஸ்லிமில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

ஒருவர் தனது செல்வாக்கைப் பயன்படுத்தி, அல்லாஹ் வுக்காக என தூய எண்ணத்துடன் தன் சகோதர முஸ்லி முக்கு ஒரு நன்மை செய்தால் அல்லது ஒரு அநீதியைத் தடுத்தால்- அதே நேரத்தில் விலக்கப்பட்ட எதையும் செய்யா மல் அல்லது யாருடைய உரிமையிலும் கை வைக்காமல் இருந் தால் அத்துடன் அவனது எண்ணம் தூய்மையானதாக இருந் தால் அவன் அல்லாஹ்விடத்தில் நற்கூலியைப் பெறுவான்.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: 'பரிந்துரை செய்யுங்கள், நற்கூலி வழங்கப்படுவீர்கள்' அறிவிப்பவர்: அபூமூஸா (ரழி), நூல்: முஸ்லிம். ஆனால் பரிந்துரை செய்ததற்காக கூலியோ பிரதி உபகாரமோ பெற்றுக் கொள்ளக் கூடாது. அதாரம்: நபி (ஸல்) கூறினார்கள்: ஒருவர் இன்னொருவருக்கு பரிந்துரை செய்து, அதற்காக அவருக்கு வழங்கப்படுகின்ற அன்பளிப்பை பெற்றுக் கொண்டால் அவர் வட்டியின் பல வாசல்களில் மிகப் பெரிய வாசலில் நுழைந்தவராவார்.
அறிவிப்பவர்: அபூஉமாமா (ரழி), நூல்:அஹ்மத்

மக்களில் சிலர் தங்களின் செல்வாக்கைப் பயன்படுத்தி அல்லது பரிந்துரை செய்து ஒருவருக்கு வேலை வாங்கித் தருவதற்கு அல்லது இட மாற்றம் வாங்கித் தருவதற்கு அல் லது ஒரு நோயாளிக்கு மருத்துவம் செய்து கொடுக்க இன் னும் இதுபோன்ற உதவிகளைச் செய்து கொடுப்பதற்காக ஒரு தொகையைக் கேட்கின்றனர். அறிஞர்களின் சரியான கூற்றின் பிரகாரம் இது ஹராமாகும். முன்னர் கூறப்பட்ட அபூ உமாமா (ரழி) அறிவிக்கும் நபிமொழியே இதற்கு ஆதாரமா கும். மட்டுமின்றி ஹதீஸின் வெளிப்படையான அர்த்தத்தைப் பார்க்கும் போது கேட்காமல் கொடுக்கப்படும் பொருளைப் பெறுவதும் ஹராம் தான். நன்மையைச் செய்யக்கூடியவ

னுக்கு மறுமையில் அல்லாஹ்விடம் கிடைக்கும் கூலி மட்டுமே போதுமானதாகும்.

ஒரு காரியத்தில் பரிந்துரை செய்யக் கோரி ஹஸன் பின் ஸஹ்ல் (ரஹ்) அவர்களிடம் ஒருவர் வந்தார். அதை அவர் நிறைவேற்றிக் கொடுத்தார். அதற்காக அம்மனிதர் அவர்களுக்கு நன்றி செலுத்த வந்தார். அப்போது அந்த மனிதரிடம் ஹஸன் பின் ஸஹ்ல் (ரஹ்) அவர்கள் எதற்காக எங்களுக்கு நன்றி செலுத்துகிறீர், பொருளுக்கு ஜகாத் இருப்பது போலவே பதவியின் பேரில் ஜகாத் கொடுக்க வேண்டியுள்ளது என்றே நாங்கள் கருதுகிறோம் எனக் கூறினார்கள். (அல்-ஆதாப் அஷ்ஷரஇய்யா)

இந்த இடத்தில் ஒரு விஷயத்தைச் சுட்டிக் காட்டுவது பொருத்தமானதாகும். அதாவது ஒருவர் தன்னுடைய வேலையை முடித்துத் தருவதற்காக சம்பளத்துக்கு ஒருவரை நியமிப்பதற்கும் ஒருவர் தன்னுடைய பதவியை, செல்வாக்கைப் பயன்படுத்தி பரிந்துரை செய்து கூலி பெறுவதற்கும் இடையில் பெருத்த வித்தியாசம் உள்ளது. முந்தியது மார்க்கத்தின் நிபந்தனைகளுடன் கூலி பெறுதல் எனும் அடிப்படையில் ஆகுமானதாகும். பிந்தியது ஹராமானதாகும்.

## வேலைக்காரனுக்கு கூலி கொடுக்காதிருத்தல்

வேலைக்காரனுக்கு அவனுடைய உரிமையை (கூலியை) விரைவாக வழங்கிட நபி (ஸல்) அவர்கள் ஆர்வமூட்டியுள்ளார்கள். வேலைக்காரனுக்கு அவனுடைய வேர்வை உலர்வதற்குள் கூலியைக் கொடுத்து விடுங்கள் என்பது நபிமொழி. அறிவிப்பவர்: இப்னு உமர் (ரழி), நூல்: முஸ்லிம்

முஸ்லிம் சமுதாயத்தில் காணப்படும் பல்வேறு அநியாயங்களில் தொழிலாளர்கள், பணியாளர்கள், வேலைக்காரர்கள் ஆகியோருக்கு அவர்களின் உரிமைகளை வழங்காதிருப்பதும்

ஒன்றாகும். இதற்குப் பல்வேறு வடிவங்கள் உள்ளன. அவற்றுள் சில வருமாறு:

வேலைக்காரனுடைய உரிமையை முழுவதும் கொடுக்க மறுப்பது, அவனிடம் அதற்கான ஆதாரம் இல்லாமல் செய்து விடுவது: இத்தகையவனுடைய உரிமை இவ்வுலகில் பறிபோனாலும் மறுமையில் அல்லாஹ்விடத்தில் வீணாகிவிடாது. அப்போது அநீதியிழைத்தவன் அநீயிழைக்கப்பட்டவனுடைய பொருளை உண்ட நிலையில் வருவான். அவனுடைய நன்மைகளை எடுத்து அவனால் பாதிக்கப்பட்டவனுக்குக் கொடுக்கப்படும். அவனுடைய நன்மைகள் தீர்ந்து விட்டால் பாதிக்கப்பட்டவனுடைய தீமைகளை எடுத்து அவன் தலையில் போட்டு அவனை நரகில் தள்ளப்படும்.

கூலியைக் குறைத்துக் கொடுப்பது: அதாவது வேலைக்காரனுக்கு அவனுடைய கூலியை முழுமையாக வழங்காமல் அநியாயமாகக் குறைத்து விடுவது.

அல்லாஹ் கூறியுள்ளான்: அளவில் மோசடி செய்வோருக்குக் கேடுதான். (83:1) சில முதலாளிகள் செய்வது இதற்கு உதாரணமாகும். அதாவது தொழிலாளர்களை அவர்களுடைய நாடுகளிலிருந்து ஒரு குறிப்பிட்ட சம்பளத்துக்கு ஒப்பந்தம் செய்து அழைத்து வருவது, அவர்கள் வேலையில் சேர்ந்த பின் ஒப்பந்தத்தை மாற்றி கூலியைக் குறைத்துக் கொடுப்பது. அப்போது தொழிலாளர்கள் வேண்டா வெறுப்புடனேயே வேலையில் ஈடுபடுகின்றனர். தங்களுக்குக் கிடைக்க வேண்டிய உரிமைகளை நிரூபிக்க இயலாதவர்களாக ஆகிவிடுகின்றனர். அதனால் தங்கள் நிலைமையை அல்லாஹ்விடமே முறையிடுகின்றனர்.

அநியாயக்கார அந்த முதலாளி முஸ்லிமாகவும் தொழிலாளி காஃபிராகவும் இருந்தால் முதலாளியின் இச்செயல் அத்தொழிலாளி இஸ்லாத்துக்கு வருவதற்குத் தடையாகிவிடு

(வது மட்டுமல்ல இஸ்லாத்தைப் பற்றித் தவறாக விளங்கு வதற்கும் காரணமாகிவிடு)கிறது. அதன் பாவமும் அந்த முத லாளிக்கு வந்து விடுகின்றது.

நிர்ணயிக்கப்பட்ட வேலைக்கும் கூடுதலான வேலைகளை கொடுத்து, அல்லது வேலை நேரத்தைக் கூட்டி, அடிப்படைக் கூலியை மட்டுமே கொடுப்பது. மேலதிகமான வேலைகளைக் செய்ததற்கான கூலியைக் கொடுக்காமலிருப்பது.

கூலி வழங்குவதில் காலதாமதம் செய்வது: தொழிலாளர் களின் கூலியை, அவர்கள் மிகுந்த சிரமப்பட்டு, திரும்பத் திரும்பக் கேட்டு, பல முறை முறையிட்டு, நீதிமன்றத்தின் கதவைத் தட்டிய பிறகே கொடுப்பது. முதலாளி கூலியைத் தாமதப்படுத்துவதன் நோக்கம் திரும்பத் திரும்பக் கேட்டு, தொழிலாளியை சோர்வடையச் செய்வதற்காகக் கூட இருக் கலாம். பிறகு அவன் தனது உரிமையை- ஊதியம் கேட்பதை விட்டு விடுவான். அல்லது தொழிலாளர்களின் ஊதியங்களை தனது தொழிலில் முடக்கி பலன் பெறுவதற்காகக் கூட இருக்கலாம்.

இன்னும் சில முதலாளிகள் அந்த ஊதியங்களை வட் டிக்கு விட்டுவிடுகின்றனர். ஆனால் இந்த ஏழைத் தொழிலாளி யோ தன் அன்றாட உணவுக்குக் கூட காசு இல்லாமல் சிரமப் படுகிறான். மட்டுமல்ல தனது மனைவி, மக்களின் செலவுக் கும் அவனால் பணம் அனுப்ப முடியவில்லை. அவர்களின் தேவையை நிறைவு செய்வதற்காகத்தானே அவன் நாடு துறந்து வந்திருக்கின்றான். இத்தகைய அக்கிரமக்காரர்க ளுக்குக் கேடுதான்! துன்புறுத்தக்கூடிய ஒரு நாளின் தண்ட னையின் வாயிலாக.

நபி(ஸல்)அவர்கள் கூறியதாக அபூஹுரைரா(ரழி) அறிவிக் கிறார்கள்: அல்லாஹ் கூறுகிறான்: மறுமையில் மூன்று பேர்க ளுடன் நான் சண்டையிடுவேன். ஒருவன் எனது பெயரால்

வாக்குக் கொடுத்து ஏமாற்றியவன், மற்றொருவன் சுதந்திர னை விற்று அதன் கிரயத்தை உண்டவன், மூன்றாமவன் ஒருவரைக் கூலிக்கு அமர்த்தி அவரிடம் முழுமையாக வேலை யை வாங்கிக் கொண்டு கூலியைக் கொடுக்காதவன். (புகாரி)

## அன்பளிப்பு வழங்குவதில் பிள்ளைகளுக்கிடையே பாரபட்சம்

சிலர் தங்களுடைய பிள்ளைகளில் சிலரை விடுத்து சில ருக்கு மட்டும் அன்பளிப்புகள், வெகுமதிகள் வழங்குகின்ற னர். ஷரீஅத் ரீதியிலான தக்க காரணம் இல்லையெனில், சரியான கூற்றின் பிரகாரம் இவ்வாறு செய்வது ஹராமாகும். உதாரணமாக தம் பிள்ளைகளில் ஒருவனுக்கு மற்ற பிள்ளை களுக்கு ஏற்படாத ஒரு தேவை ஏற்பட்டு விட்டதுதெனில் - உதாரணமாக அவன் நோயாளியாக இருக்கிறான், அல்லது அவனுக்கு கடன் இருக்கிறது, அல்லது திருக்குர்ஆனை மன னம் செய்ததற்காக அவனுக்கு வெகுமதி கொடுக்க வேண்டி இருக்கிறது, அல்லது அவன் வேலையில்லாமல் இருக்கிறான், அல்லது அவனது குடும்பம் பெரிதாக இருக்கிறது, அல்லது அவன் படித்துக் கொண்டு இருக்கிறான்- அவனுக்குப் படிப்புச் செலவு இருக்கிறது, இன்னும் இதுபோன்ற மார்க்கம் அனுமதிக் கின்ற ஏதாவது ஒரு காரணம் இருந்தால் அந்தப் பிள்ளைக்கு மட்டும் அன்பளிப்பு வழங்குவதில் தவறில்லை. ஆனால் அப் படிக் கொடுக்கும்போது அதுபோன்ற தேவை மற்ற பிள்ளைக் கும் வந்தால் அவனுக்கும் கொடுப்பேன் என அந்தத் தந்தை எண்ணிக் கொள்ள வேண்டும்.

இவை அனைத்திற்கும் பொதுவான ஆதாரம்: அல்லாஹ் கூறுகிறான்: நீதி செலுத்துங்கள். இதுவே இறையச்சத்திற்கு மிக நெருக்கமானது. அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளுங்கள். (5:8) குறிப்பான ஆதாரம் நுஃமான் பின் பஷீர் (ரழி) அறிவிக்கும்

ஹதீஸாகும்: அவருடைய தந்தை அவரை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் அழைத்து வந்து, நான் என்னுடைய இந்த மகனுக்கு ஒரு அடிமையை அன்பளிப்புச் செய்துள் ளேன் என்று கூறினார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், இது போன்று உமது எல்லா பிள்ளைகளுக்கும் அன்பளிப்புச் செய்துள்ளீரா? எனக் கேட்டார்கள். அதற்கவர் இல்லை என்று கூறவும், அப்படியாயின் அந்த அன்பளிப்பை திரும்பப் பெறுவீராக! என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர் கள் கூறினார்கள். (புகாரீ)

மற்றொரு அறிவிப்பில், 'அல்லாஹ்வை அஞ்சிக்கொள்ளுங் கள். பிள்ளைகளுக்கிடையே நீதி செலுத்துங்கள் எனக் கூறி னார்கள். பிறகு அவர் திரும்பிச் சென்று தான் அன்பளிப்புச் செய்ததை திரும்பப் பெற்றுக் கொண்டார்' என வந்துள்ளது. ஸஹீஹ் முஸ்லிமுடைய ஒரு அறிவிப்பில், 'அப்படியானால் என்னை இதற்கு சாட்சியாக்காதீர். அநியாயத்துக்கு நான் சாட்சியாக இருக்க மாட்டேன்' என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக உள்ளது. இமாம் அஹ்மத் (ரஹ்) அவர்களின் கருத்தாவது: அன்பளிப்பு ஒரு ஆணுக்கு இரு பெண்களின் பங்கிற்குச் சமமானது கொடுக்கப்பட வேண்டும்- சொத்துப் பங்கீட்டில் கொடுக்கப்படுவது போன்று.

சில குடும்பங்களின் நிலையைப் பார்க்கின்றபொழுது இப் படியும் சில தந்தையர்களைக் காண முடிகின்றது. அவர்கள் தம் பிள்ளைகளுக்கு அன்பளிப்புகள் வழங்குவதில் பாரபட்சம் காட்டுகின்றனர். இது விஷயத்தில் அவர்கள் அல்லாஹ்வை அஞ்சுவதில்லை. இதனால் பிள்ளைகளின் • உள்ளங்களில் பொறாமையை மூட்டிவிடுகின்றனர். அவர்களிடையே வெறுப் பையும், பகைமையையும் விதைத்து விடுகின்றனர்.

சிலபோது, தனது பிள்ளை தன் உடன் பிறந்த சகோதர னைப் போல் இருந்தால் அவனுக்குக் கொடுப்பதும், தன்

மனைவியின் சகோதரனைப் போல் இருந்தால் கொடுக்காமல் இருப்பதும் உண்டு. (சவூதி போன்ற நாடுகளில் இப்படி நடக்கிறது) அல்லது தன் மனைவியரில் ஒருத்தியினுடைய பிள்ளைகளுக்குக் கொடுப்பதும் ஒருத்தியினுடைய பிள்ளைகளுக்குக் கொடுக்காமல் இருப்பதும் உண்டு. சில சமயம் தமது மனைவியரில் ஒருத்தியின் பிள்ளைகளை குறிப்பிட்ட பள்ளியிலும் ஒருத்தியினுடைய பிள்ளைகளை வேறொரு பள்ளியிலும் சேர்க்கின்றனர். இவ்வாறு செய்வது அவர்களுக்கே பாதகமாக மாறிவிடும். காரணம் புறக்கணிக்கப்பட்டவன் பெரும்பாலும் எதிர்காலத்தில் தன்னுடைய தந்தையிடம் நல்ல முறையில் நடந்து கொள்ள மாட்டான்.

தம் பிள்ளைகளுக்கு அன்பளிப்புகள் வழங்குவதில் பாரபட்சம் காட்டியவருக்கு நபி(ஸல்) பின்வருமாறு கூறினார்கள்: அவர்கள் உம்மிடம் நல்ல முறையில் நடந்து கொள்வதில் சமமாக இருக்க வேண்டும் என்பதை நீர் விரும்பவில்லையா? அறிவிப்பவர்: நுஅமான் பின் பஷீர் (ரழி), (அஹ்மத், முஸ்லிம்)

## தேவையின்றி யாசகம் கேட்பது

ஒருவன் தனக்குப் போதுமான அளவு வசதி இருந்தும் யாசகம் கேட்டால் அவன் நரகத்தின் கங்குகளையே அதிகப்படுத்திக் கொள்கிறான் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். யாசகம் கேட்காத அளவுக்கு போதுமான வசதி என்றால் என்ன? எனத் தோழர்கள் கேட்டனர். அதற்கு அவர்கள், ஒரு பகல், ஓர் இரவு உண்பதற்குப் போதுமான அளவு என்று கூறினார்கள். அறிவிப்பவர்: ஸஹ்ல் பின் ஹன்ழலா (ரலி), நூல்: அபூதாவூத். தனக்குப் போதுமான அளவு வசதி இருந்தும் யாசகம் கேட்பவன் மறுமையில், முகத்தில் சதை பிராண்டப்பட்டவனாக வருவான் என்பதும் நபிமொழி. அறிவிப்பவர்: இப்னு மஸ்வூத் (ரலி), நூல்: அஹ்மத்

யாசிப்போர்களில் சிலர் பள்ளிகளில் மக்களுக்கு முன்னால் நின்று கொண்டு தங்களின் பிரச்சனைகளைக் கூறி திக்ரு, தஸ்பீஹ் செய்வதற்கு இடைஞ்சலை ஏற்படுத்துகின்றனர். இன்னும் சிலர் போலி ஆவணங்களைத் தயாரித்து வைத்துக் கொண்டு, பொய்களையும் கட்டுக் கதைகளையும் அவிழ்த்து விடுகின்றனர். சிலபோது யாசகம் கேட்பதற்கு தம் குடும்பத் தவர்களையும் அழைத்து வந்து பல பள்ளிகளில் நிறுத்தி விடுகின்றனர். பின்னர் எல்லோரையும் ஓரிடத்தில் ஒன்று கூட்டி வசூலானதைச் சேகரித்து பிறகு வேறு வேறு பள்ளிக ளுக்கு செல்கிறார்கள். இவர்கள் எந்த அளவு வசதியாக இருக்கிறார்கள் என்பதை அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் அறிய முடியாது.அவர்கள் இறந்த பின்னரே அவர் களுடைய சொத்து எவ்வளவு என்று தெரிய வரும்.

இவர்களைத் தவிர உண்மையிலேயே தேவையுள்ளவர் களும் உள்ளனர். அவர்கள் எத்தகையவர்கள் எனில் அவர்க ளின் நிலையை அறியாதவர் அவர்களின் சுயமரியாதையைக் கண்டு அவர்கள் தன்னிறைவு பெற்றவர்கள் என எண்ணிக் கொள்வர். அவர்கள் மக்களிடத்தில் வற்புறுத்திக் கேட்கவும் மாட்டார்கள், அவர்களின் நிலை அறிந்து அவர்களுக்கு தர் மம் கொடுக்கப்படுவதுமில்லை.

## திருப்பிக் கொடுக்க வேண்டுமென்ற நோக்கமில்லாமல் கடன் கேட்பது

மனித உரிமைளுக்கு அல்லாஹ்விடம் அதிக முக்கியத்து வம் உண்டு. ஒரு மனிதன் அல்லாஹ்வுக்குச் செய்ய வேண் டிய கடமைகளிலிருந்து தவறினால் தவ்பா செய்வதன் மூலம் பரிகாரம் பெறலாம். ஆனால் மனித உரிமைகளில் தவறிழைத் தால் அந்த (மறுமை) நாள் வருவதற்கு முன் அவற்றை நிறை வேற்றாத வரை தப்பிக்க முடியாது. அந்நாளில் விவகாரம்

**திர்ஹமையோ தீனாரையோ கொண்டு தீர்க்கப்பட மாட்டாது. மாறாக நன்மை, தீமைகளைக் கொண்டே தீர்க் கப்படும். அல்லாஹ் கூறுகிறான்: அடைக்கலப் பொருள்களை அவற்றிற் குரியவர்களிடம் நீங்கள் ஒப்படைத்து விட வேண்டும் என அல்லாஹ் உங்களுக்குக் கட்டளையிடுகின்றான். (4:58)**

**சமுதாயத்தில் பரவலாகக் காணப்படும் தீமைகளில் ஒன்று தான் கடன் வாங்குவதைச் சாதாரணமாகக் கருதும் போக்கும். சிலர் மிக அவசியத் தேவைக்காகக் கடன் வாங்குவ தில்லை. அவர்கள் கடன் வாங்குவதெல்லாம் இருக்கும் வளத்தை அதிகப்படுத்தும் ஆர்வத்தில் தான். மேலும் வாக னம், வீட்டின் அலங்காரப் பொருள் போன்ற அழியும் உலக சாதனங்களை-குப்பைகளைப் புதிதுபுதிதாகப் பயன்படுத்து வதில் பிறருடன் போட்டிபோடும் எண்ணத்தில்தான் கடன் வாங்குகின்றனர். இத்தகையவர்கள் பெரும்பாலும் தவணை முறையில் கொடுக்கல், வாங்கல் செய்யும் வியாபாரங்களில்** (Instalment) **ஈடுபட்டு விடுகின்றனர். அவை பெரும்பாலும் ஹரா மாகவோ அல்லது ஹராமா ஹலாலா என சந்தேகம் கொள் ளும் வியாபாரமாகவோ தான் இருக்கின்றன.**

**கடன் வாங்குவதை சர்வசாதாரணமாக நினைப்பது திருப் பிக் கொடுப்பதைக் கால தாமதம் செய்வதன் பால், அல்லது அடுத்தவர்களுடைய பணத்தைப் பாழாக்கி அதை அழிப்பதன் பால் இட்டுச் செல்லும். இச்செயலின் முடிவு பற்றி எச்சரித்தவர் களாக நபி(ஸல்) அவர்கள் இவ்வாறு கூறியுள்ளார்கள்: யார் திருப்பிக் கொடுத்திட வேண்டுமென்ற நோக்கோடு மக்களின் பொருள்களை (கடனாக) வாங்குகிறாரோ அதனை அல்லாஹ் திருப்பிக் கொடுத்து விடுகிறான். (அதாவது அவர் திருப்பிக் கொடுக்க அல்லாஹ் அவருக்கு உதவுகிறான்) அப்பொருளை நாசப்படுத்திடும் நோக்கில் வாங்கினால் அதனை அல்லாஹ் நாசமாக்கிவிடுகிறான். அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரழி), (புகாரி)**

ஆம்! கடன் விஷயத்தில் மக்கள் ரொம்பவும் அலட்சியமாக இருக்கின்றனர். அதை இலேசாகக் கருதுகின்றனர். ஆனால் அதுவோ அல்லாஹ்விடம் மிகப் பெரிய விஷயமாக இருக் கிறது. மட்டுமின்றி ஒரு உயிர்த்தியாகிக்கு- மிகப்பெரும் பாக் கியம், அளப்பரிய கூலி, மிக உயர்ந்த அந்தஸ்து இவையெல் லாம் இருந்தும் கூட கடனை நிறைவேற்றாத குற்றத்திலிருந்து அவர் தப்பிக்க முடியாது.

இதற்கு ஆதாரம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறி யுள்ளார்கள்: சுப்ஹானல்லாஹ்! கடன் விஷயத்தில் எவ்வளவு கடுமையான எச்சரிக்கையை அல்லாஹ் இறக்கி வைத்திருக் கிறான் தெரியுமா? என்னுடைய உயிர் எவன் கைவசம் உள்ள தோ அவன் மீது சத்தியமாக! ஒருவர் அல்லாஹ்வின் பாதை யில் கொல்லப்பட்டு, பின்னர் உயிர் கொடுக்கப்பட்டு, மீண்டும் கொல்லப்பட்டு மீண்டும் உயிர்ப்பிக்கப்படுகின்றார் எனில் அவர் மீது கடன் பாக்கி இருந்தால் அக்கடனை நிறை வேற்றாத வரை அவர் சொர்க்கம் செல்ல கமாட்டார். அறிவிப்பவர்: முஹம்மத் பின் ஜஹ்ஸ் (ரழி), நூல்: நஸயி.

இத்தனைக்குப் பிறகும் கடன் விஷயத்தில் அலட்சியமாக இருப்பவர்கள் திருந்துவார்களா?

## ஹராமானவற்றை உண்ணுதல்

இறையச்சம் இல்லாதவன் செல்வத்தை எங்கிருந்து சம் பாதிக்கிறோம் அதை எவ்வழியில் செலவு செய்கிறோம் என்ப தைப் பொருட்படுத்த மாட்டான். மாறாக அவனுடைய அக்க றை தன் செல்வத்தை அதிகப்படுத்துவதிலேயே இருக்கும். அது திருடுதல், லஞ்சம் வாங்குதல், பிறருடைய பொருளை அபகரித்தல், மோசடி செய்தல், ஹராமான வியாபாரம், வட்டி கொடுக்கல் வாங்கல், அநாதையின் சொத்தை அபகரித்தல் ஆகியவற்றின் மூலமாகவோ அல்லது ஜோதிடம், விபச்சாரம்,

**இசை போன்ற ஹராமான காரியங்களின் பேரில் கிடைக்கக் கூடிய கூலியின் மூலமாகவோ அல்லது பொதுச் சொத்துக் களில் ஏகக வைத்தல், பிற ரிடம் வற்புறுத்திக் கேட்டுப் பெறுதல், தேவையின்றி யாசகம் கேட்டல் போன்ற ஹராமான வழியின் மூலமாகவோ கிடைத்தாலும் சரியே! பின்னர் அவன் அதிலி ருந்தே உண்பான், உடுத்துவான், வாகனம் வாங்குவான், வீடு கட்டுவான், அதை வாடகைக்கு அமர்த்துவான், வீட்டுக் குத் தேவையான சாமான்களை வாங்குவான், ஹராமைக் கொண்டே தம் வயிற்றை நிரப்பிக் கொள்வான். நபி (ஸல்) அவர் கள் கூறியுள்ளார்கள்: ஹராமிலே வளர்ந்த ஒவ்வொரு உட லுக்கும் நரகமே பொருத்தமாகும். (தப்ரானி)**

**மறுமையில் அவனுடைய செல்வம் பற்றி-அதை எங்கிருந்து சம்பாதித்தாய்? எவ்வழியில் செலவழித்தாய்? என்று அவனிடம் விசாரணை செய்யப்படும். அங்குதான் அவனுக்கு நஷ்டமும் நாசமும் காத்திருக்கிறது. எனவே யாரிடம் ஹராமான பொருள் எஞ்சியிருக்கின்றதோ அவர் விரைந்து தன்னை அதிலிருந்து விடுவித்துக் கொள்ளட்டும். அது ஒரு மனிதனுக்குரிய உரிமை யாக இருந்தால் அந்த (மறுமை) நாள் வருவதற்கு முன் அதை அவரிடம் விரைந்து திருப்பிக் கொடுத்து அவரிடம் மன்னிப்புக் கோரட்டும். அந்த மறுமை நாள் வந்துவிட்டாலோ விவகாரம் திர்ஹமையோ தீனாரையோ கொண்டு தீர்க்கப்பட மாட்டாது. மாறாக நன்மை, தீமைகளைக் கொண்டே தீர்க்கப்படும்.**

## ஒரு துளியேனும் மது அருந்தல்

**அல்லாஹ் கூறுகிறான்: இறைநம்பிக்கை கொண்டவர் களே! மது, சூதாட்டம், பலிபீடங்கள், குறிபார்க்கும் அம்புகள் ஆகியவை அருவருக்கத்தக்க ஷைத்தானியச் செயல்களா கும். அவற்றைத் தவிர்ந்து கொள்ளுங்கள். அதன் மூலம் நீங் கள் வெற்றி பெறலாம். (5:90)**

மதுவைத் தவிர்ந்து கொள்ளும்படிக் கட்டளையிட்டிருப்பது அது ஹராம் என்பதற்கு பலமான ஆதாரமாகும். மதுவை அடுத்து அல்லாஹ் பலிபீடங்களைக் கூறியுள்ளான். அவை காஃபிர்களுடைய கடவுள்களான விக்கிரகங்களாகும். (விக்கிரகங்கள் எந்த அளவுக்கு ஹராமோ அது போல மதுவும் ஹராமாகும் என்பதை இது காட்டுகிறது) இனி, அல்லாஹ் அது ஹராம் என்று கூறவில்லையே! அதைத் தவிர்ந்து கொள்ளுங்கள் என்று தானே கூறியுள்ளான் என்று கூறுபவர்களுக்கு எந்த ஆதாரமும் எஞ்சியிருக்கவில்லை.

மது அருந்துபவனுக்கு நபிமொழியிலும் கடுமையான எச்சரிக்கை வந்துள்ளது. போதைப் பொருளை அருந்துபவனுக்கு 'தீனதுல் கபால்' எனும் பானத்தைப் புகட்டுவதாக அல்லாஹ்விடம் ஒரு வாக்குறுதி உள்ளது என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்)அவர்கள் கூறினார்கள். அப்போது, அல்லாஹ்வின் தூதரே! 'தீனதுல் கபால்' என்றால் என்ன? எனத் தோழர்கள் கேட்டதும் அல்லாஹ்வின் தூதரவர்கள், நரகவாசிகளின் வியர்வை அல்லது நரகவாசிகளின் சீழ் என பதிலளித்தார்கள். அறிவிப்பவர்: ஜாபிர் (ரழி), நூல்: முஸ்லிம்.

மதுப்பழக்கத்திற்கு அடிமையான நிலையில் ஒருவன் மரணமடைந்து விட்டால் அவன் விக்கிர ஆராதனை செய்தவன் போலவே அல்லாஹ்வை சந்திப்பான் என்றும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறினார்கள். அறிவிப்பவர்: இப்னு அப்பாஸ் (ரழி), நூல்: தப்ரானி

நம்முடைய இக்காலத்தில் மதுவும், போதைப் பொருள்களும் பல்வேறு வகைகளில் காணக் கிடைக்கின்றன. அரபியிலும் வேறு மொழிகளிலும் அவற்றுக்குப் பல்வேறு பெயர்கள் உள்ளன. மதுவை-கள் என்றும், சாராயம் என்றும், விஸ்கி, பீர், பிராந்தி, ஒயின், ரம், ஆல்கஹால், வாடுக (Vodka), அரக் (Arrack), ஷம்பேன் (Champagne) என்றெல்லாம் கூறிக்கொள்கின்றனர்.

என்னனுடைய சமுதாயத்தில் சிலர் நிச்சயம் மது அருந்து வார்கள். ஆனால் அதற்கு வேறு பெயரைக் கூறிக் கொள்வார் கள் (நபிமொழி. அறிவிப்பவர்: அபூமாலிக் அல்-அஷ்அரி (ரழி), நூல்: இப்னுமாஜா) என்று யாரைப் பற்றி நபி(ஸல்)அவர்கள் கூறினார்களோ அத்தகையவர்கள் இச்சமுதாயத்தில் தோன் றிவிட்டனர். இவர்கள் மது என்ற பெயரை மூடி மறைத்து விட்டு அதற்குப் பகரமாக 'உற்சாகமூட்டும் பானங்கள்' எனக் கூறி மக்களை ஏமாற்றுகின்றனர். அல்லாஹ் கூறுகிறான்: அவர்கள் அல்லாஹ்வையும் இறைநம்பிக்கை கொண்டவர்களையும் ஏமாற்றுகின்றனர். ஆனால் (உண்மையில்) அவர்கள் தம்மைத் தாமே ஏமாற்றிக் கொள்கின்றனரேயன்றி வேறில்லை. அவர் கள் அதை உணர்வதில்லை. (2:9)

இவ்விஷயத்துக்கு முடிவு கட்டக்கூடிய, விளையாட்டுத் தனமான இத்தகைய குழப்பத்தை வேரோடும் வேரடி மண் ணோடும் அழித்தொழிக்கக்கூடிய மாபெரும் சட்டத்தை இஸ் லாம் கொண்டு வந்துள்ளது. அது பின்வரும் நபிமொழியில் இவ்வாறு உள்ளது: போதை தரக்கூடிய அனைத்தும் மதுவா கும். போதை தரக்கூடிய அனைத்தும் ஹராமாகும். அறிவிப்ப வர்: இப்னு உமர் (ரழி), நூல்: முஸ்லிம்.

புத்தியை பேதலிக்கச் செய்து, போதையை ஏற்படுத்தக் கூடிய அனைத்தும்-அது குறைவாக இருந்தாலும் அதிகமாக இருந்தாலும்- ஹராமாகும். நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்: போதை தரக்கூடியது அதிகமாக இருந்தாலும், குறைவாக இருந்தாலும் ஹராமாகும். அறிவிப்பவர்: ஜாபிர் (ரழி), நூல்: அபூதாவூத்.

மதுவுக்கு எத்தனை பெயர்கள் இருந்தாலும் எத்தனை வகைகள் இருந்தாலும் எல்லாம் ஒன்று தான். எல்லாம் மது தான். எல்லாவற்றுக்கும் (ஹராம் எனும்)ஒரே சட்டம் தான்.

இறுதியாக மது அருந்துபவர்களுக்கு இதோ நபி(ஸல்) அவர்கள் செய்த ஓர் அறிவுரை.

எவன் மது அருந்தி அதனால் அவனுக்குப் போதை ஏற்பட்டால் அவனுடைய நாற்பது நாட்களின் காலைத் தொழுகை ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது. அவ்வாறே அவன் மரணமடைந்து விட்டால் நரகம் புகுவான். அவன் தவ்பா செய்தால் அவனுடைய தவ்பாவை அல்லாஹ் ஏற்றுக் கொள்கிறான். தவ்பா செய்து மீண்டும் மது அருந்தி, போதை ஏற்பட்டால் (மீண்டும்) அவனுடைய நாற்பது நாட்களின் காலைத் தொழுகை ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது. அப்படியே அவன் மரணமடைந்தால் நரகம் புகுவான். அவன் தவ்பா செய்தால் அவனுடைய தவ்பாவை அல்லாஹ் ஏற்றுக் கொள்கிறான்.

தவ்பா செய்து மீண்டும் மது அருந்தி, போதை ஏற்பட்டால் (மீண்டும்) அவனது நாற்பது நாட்களின் காலைத் தொழுகை ஏற்றுக்கொள்ளப்பட மாட்டாது. அப்படியே அவன் மரணமடைந்தால் நரகம் புகுவான். அவன் தவ்பா செய்தால் அவனுடைய தவ்பாவை அல்லாஹ் ஏற்றுக் கொள்கிறான். திரும்பவும் அவன் மது அருந்தி போதை ஏற்பட்டால் மறுமை நாளில் அவனுக்கு 'ரத்கதுல் கபால்' என்ற பானத்தைப் புகட்டுவது அல்லாஹ்வின் மீது கடமையாகுமென நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள். அப்போது நபித்தோழர்கள் அல்லாஹ்வின் தூதரே! 'ரத்கதுல் கபால்' என்றால் என்ன? என்று வினவினர். அதற்கு நபி(ஸல்)அவர்கள் 'நரகவாசிகளின் சீழ்' என பதிலளித்தார்கள். அறிவிப்பவர்: அப்துல்லாஹ் பின் அம்ர் (ரழி), (இப்னுமாஜா)

மது போன்ற போதைப் பொருட்களைப் பயன்படுத்துபவர்களின் நிலையே இதுவானால் அதை விடக் கடுமையான போதையுடைய பொருட்களைப் பயன்படுத்துபவர்களின் நிலை, அதற்கு அடிமையானவர்களின் நிலை எதுவோ?!

## தங்கம், வெள்ளிப் பாத்திரங்கள்

தற்காலத்தில் வீட்டிற்குத் தேவையான சாமான்களை விற்பனை செய்யும் கடைகளில் எந்தக் கடையிலும் தங்கம், வெள்ளிப் பாத்திரங்கள் அல்லது தங்கம், வெள்ளி முலாம் பூசப்பட்ட பாத்திரங்கள் இல்லாமலில்லை. அவ்வாறே செல் வந்தர்களுடைய வீடுகளும், பல ஹோட்டல்களும். இன்னும் சொல்வதானால் இந்த தங்கம், வெள்ளிப் பாத்திரங்கள் பல் வேறு சந்தர்ப்பங்களில் சிலர், சிலருக்கு வழங்கும் உயர்ந்த அன்பளிப்புப் பொருள்களாகவும் ஆகிவிட்டன.

இன்னும் சிலர் தங்களுடைய வீடுகளில் அவற்றை வைத் துக்கொள்வதில்லை. ஆயினும் மற்றவர்களுடைய வீடுகளிலும் அவர்களின் வலீமா- திருமண விருந்துகளிலும் கலந்துகொள் ளும்போது அவற்றைப் பயன்படுத்துகின்றனர். இவையனைத் தும் மார்க்கத்தில் ஹராமாக்கப்பட்ட காரியங்களாகும். இப் பாத்திரங்களைப் பயன்படுத்துவது பற்றி நபி(ஸல்)அவர்கள் மூலம் கடுமையான எச்சரிக்கையும் வந்துள்ளது. அவர்கள் கூறியதாவது:

நிச்சயமாக தங்கம்,வெள்ளிப் பாத்திரங்களில் உண்பவன் அல்லது பானம் அருந்துபவன் தன் வயிற்றினுள் நரக நெருப் பையே நிரப்புகிறான். அறிவிப்பவர்: உம்மு ஸலமா(ரழி),நூல்: முஸ்லிம்

இந்தச் சட்டம் உணவுக்காகப் பயன்படுத்தப்படும் எல்லா வகைப் பண்ட- பாத்திரங்களையும் எடுத்துக் கொள்ளும். உதாரணமாக தட்டு, கரண்டி வகைகள், கத்திகள், விருந் தினருக்காகப் பயன்படுத்தப்படும் பாத்திரங்கள், திருமணம் போன்ற நிகழ்சிகளில் இனிப்புப் பண்டங்களை வைக்கப் பயன் படுத்தப்படுகின்ற டப்பாக்கள் போன்றவை.

இன்னும் சிலரோ நாங்கள் இப்பாத்திரங்களைப் பயன் படுத்துவதில்லை. ஆனால் கண்ணாடிப் பெட்டி (ஷோக்கேஸ்) களில் அழகுக்காக மட்டுமே வைத்துக் கொள்கிறோம் என் கின்றனர். இதுவும் கூடாது. ஏனெனில் இது உபயோகப்படுத் துவதற்கான வழியைத் திறந்துவிடும் என்பதற்காக.

## பொய் சாட்சி சொல்லுதல்

அல்லாஹ் கூறுகிறான்: எனவே விக்கிரகங்கள் எனும் அசுத்தத்திலிருந்து தவிர்ந்து கொள்ளுங்கள். பொய்யான பேச்சுகளிலிருந்தும் விலகியிருங்கள். அல்லாஹ்வுக்கு எத னையும் இணையாக்காது, அவனுக்கே ஒருமனப்பட்டவர்க ளாய்த் திகழுங்கள். (22:30,31)

அபூபக்ரா (ரழி) அறிவிக்கிறார்கள்: பெரும் பாவங்களில் மிகப் பெரும் பாவத்தை நான் உங்களுக்கு அறிவிக்கட்டுமா? என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மூன்று முறை கேட்டார் கள்! அதற்கு நாங்கள், அல்லாஹ்வின் தூதரே! அறிவியுங்கள் என்றோம். அதற்கவர்கள் அல்லாஹ்வுக்கு இணைவைப்பது, பெற்றோரை நிந்திப்பது என்று கூறினார்கள். சாய்ந்திருந்த அவர்கள் நிமிர்ந்து உட்கார்ந்து, அறிந்து கொள்ளுங்கள்! பொய் சொல்வதும் பொய் சாட்சி கூறுவதும்தான், அறிந்து கொள்ளுங்கள்! பொய் சொல்வதும் பொய் சாட்சி கூறுவதும் தான் என்று கூறினார்கள். நிறுத்த மாட்டார்களா? என நான் கூறும் அளவுக்கு அவற்றைத் திரும்பத் திரும்பக் கூறிக்கொண் டிருந்தார்கள். புகாரி (5976), முஸ்லிம்.

பொய் சாட்சி சொல்வதைப் பற்றிய எச்சரிக்கை இங்கு திரும்பத் திரும்பக் கூறப்பட்டிருப்ப தற்குக் காரணம் மக்கள் அதைச் சாதாரணமாக எண்ணுவதும், அதன் பால் தூண்டக் கூடிய பகைமை, பொறாமை போன்ற காரணங்கள் அதிகமாக இருப்பதாலும், அதனால் பெரும் தீமைகள் விளைவதாலும்

தான். பொய் சாட்சியால் எத்தனை உரிமைகள் பாழாகியுள் ளன! எத்தனை நிரபராதிகள் பாதிக்கப்பட்டுள்ளனர்! அதுமட் டுமா பொய் சாட்சியினால் எத்தனையோ பேர் தங்களுக்கு உரிமை இல்லாதவற்றை அடைந்துள்ளனர்! எத்தனையோ பேருக்கு போலியான குடும்ப உறவு ஏற்பட்டுள்ளது!

பொய் சாட்சி சொல்வதை சாதாரணமாகக் கருதுவதில் இதுவும் அடங்கும். சிலர் நீதி மன்றங்களில் தான் சந்திக்கும் (முன் பின் தெரியாத) ஒருவரிடம் எனக்கு நீ சாட்சி சொல், உனக்கு நான் சாட்சி சொல்கிறேன் என்று கூறுகின்றனர். பிறகு உண்மை நிலவரம் என்ன, சூழ்நிலை என்ன என்று தெரிந்திருக்க வேண்டிய விஷயங்களிலும் கூட எதுவும் தெரி யாமலேயே ஒருவருக்கு ஒருவர் சாட்சி கூறிக்கொள்கின்றனர்.

உதாரணமாக இவன்தான் இந்த நிலத்துக்கு அல்லது இந்த வீட்டுக்குச் சொந்தக்காரன், அல்லது இவன் குற்றமற் றவன் என்று சாட்சி சொல்லிக் கொள்கின்றனர். ஆனால் அவ னை (முதல் முறையாக) நீதிமன்ற வாசலிலோ அல்லது தெரு விலோதான் சந்தித்திருப்பார்கள். இது பொய்யான, போலியான சாட்சியாகும். சாட்சி கூறுவதென்பது 'நாங்கள் அறிந்ததை வைத்தே சாட்சி சொல்கிறோம்.' (12:81) என்று திருக்குர்ஆனில் சொல்லப்பட்டிருப்பது போல அமைய வேண்டும்.

## இசையும் இசைக் கருவிகளும்

மனிதர்களில் சிலர் இப்படியும் இருக்கின்றார்கள். மன மயக் கத்தை ஏற்படுத்தும் விஷயங்களை அவர்கள் விலைக்கு வாங்குகிறார்கள். எதற்காகவெனில் அவர்கள் எவ்வித அறிவு மின்றி (மக்களை) அல்லாஹ்வின் பாதையை விட்டு பிறழச் செய் வதற்காகவும் அதை ஏளனம் செய்வதற்காகவும் தான். (31:6) இவ்வசனத்திலுள்ள மன மயக்கத்தை ஏற்படுத்தும் விஷயங்

கள் என்பதன் கருத்து பாடல்களே என இப்னு மஸ்வூத்(ரழி) கூறியுள்ளார்கள்.

விபச்சாரம், பட்டு, மது, இசைக் கருவிகள் ஆகியவற்றை ஹலாலாக்கிக் கொள்ளக்கூடிய ஒரு கூட்டம் என்னுடைய சமுதாயத்தில் நிச்சயம் தோன்றும் என நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூஆமிர்(ரழி), மற்றும் அபூமாலிக் அல்அஷ்அரி (ரழி) அறிவிக்கிறார்கள். நூல்: புகாரி

மேலும் அனஸ்(ரழி)அறிவிப்பதாவது: திண்ணமாக இந்த சமுதாயத்தில் பூகம்பம், உருமாற்றம் செய்யப்படுதல், அவதூறு கூறல் ஆகியவை உண்டாகும். எப்போதெனில் அவர்கள் மது பானங்களை அருந்தும்போது, (நடனமாடி) பாட்டுப் படிக்கும் பெண்களை ஏற்படுத்தும் போது, இசைக் கருவிகளைப் பயன் படுத்தும் போது என்று நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள். (இப்னு அபித்துன்யா)இதே கருத்து திர்மிதியிலும் உள்ளது.

நபி(ஸல்) அவர்கள் முரசு அடிப்பதைத் தடுத்துள்ளார்கள். நாதசுரம்(Pipe)பற்றிக் குறிப்பிடும்பொழுது அது தீய, மோசமான சப்தமெனக் கூறியுள்ளார்கள். இமாம் அஹ்மத்(ரஹ்)அவர்கள் போன்ற முன் சென்ற மார்க்க அறிஞர்களும் யாழ்(வீணை), மேன்டலின், ரீபெக், (Mandolin. Rebec-இவை யாவும் வீணையில் ஒவ்வொரு வகை), புல்லாங்குழல், சிங்கி (Cymbal) போன்ற இசைக் கருவிகள் ஹராம் எனக் கூறியுள்ளனர்.

மேலும் நபி(ஸல்)அவர்கள் இசைக் கருவிகளைத் தடுத்துள்ள ஹதீஸில் வயலின், சிதர் (Zither - இது ஒரு வகை நரம்பு இசைக் கருவி), பியானோ, கிதார் போன்ற நவீன இசைக் கருவிகளும் அடங்கும் என்பதில் ஐயமில்லை. இன்னும் சொல்வதானால் இந்த நவீன இசைக் கருவிகள் ஹதீஸ்களில் தடை வந்துள்ள பழங்கால இசைக் கருவிகளை விட பெருமளவு பரவசம், போதை, மற்றும் பாதிப்புகளை ஏற்படுத் தக்கூடியவையாகும். இப்னுல் கய்யூம் போன்ற அறிஞர்கள் கூறியது

போல இசையின் போதை மதுவின் போதையை விடக் கடுமை யானது. இசையுடன் பாடலும், மனமகிழ்ச்சியூட்டி பரவசப்படுத் தும் பெண்களின் குரலும் இணைந்து விட்டால் அது அதை விடக் கூடுதல் ஹராமாகும், கூடுதல் பாவமாகும் என்பதில் சந்தேகமில்லை.

பாடலின் வரிகள் அன்பையும் காதலையும் வெளிப்படுத்தக் கூடியதாகவும் காதலியின் அழகை வர்ணிப்பதாகவும் இருந் தால் விபரீதம் மேலும் அதிகமாகிவிடும். இதானால் தான் பாடல் கள் விபச்சாரத்திற்குத் தூதுவிடுகின்றது, உள்ளத்தில் நய வஞ்சகத்தை வளர்க்கின்றது என அறிஞர்கள் கூறுகின்றனர். மொத்தத்தில் பாடல்கள் மற்றும் இசையின் பிரச்சனை இக் காலத்தில் மிகப் பெரும் குழப்பமாகவும் சோதனையாகவும் ஆகிவிட்டது.

மேலும் நம்முடைய இக்காலத்தில் பல்வேறு பொருட்களில் இசை நுழைந்து விட்டிருப்பது மிகப் பெரும் தொல்லையாகும். உதாரணத்திற்கு கைக்கடிகாரங்கள், அலாரங்கள், குழந்தை களின் விளையாட்டுப் பொருள்கள், கம்யூட்டர்கள், சில தொ லை பேசிச் சாதனங்கள் ஆகியவற்றைச் சொல்லலாம். இவற் றைத் தவிர்ப்பதற்கு பெரும் மன உறுதி வேண்டும் என்றாகி விட்டது! அல்லாஹ் தான் உதவி செய்ய வேண்டும்.

## புறம் பேசுதல்

முஸ்லிம்களைப் புறம் பேசுவதும் அவர்களின் கண்ணியத் திற்கும் மான மரியாதைக்கும் இழுக்காகப் பேசுவதும் பெரும் பாலான சபைகளுக்கு சக்கரைப் பொங்கலாக ஆகிவிட்டது. புறம் பேசுவதை அல்லாஹ் தடை செய்துள்ளான். அதை விட்டும் தன் அடியார்களை விலகியிருக்கச் செய்திருக்கிறான். மனித உள்ளங்கள் அருவருப்பாகக் கருதுகின்ற விதத்தில் அதற்கு ஓர் உவமானம் கூறியுள்ளான்: உங்களில் ஒருவர்

மற்றவரைப் பற்றி புறம் பேச வேண்டாம், உங்களில் எவரே னும் இறந்து விட்ட தன் சகோதரரின் இறைச்சியை உண்ண விரும்புவாரா? அதை நீங்களே வெறுகின்றீர்கள். (49:12)

புறம் என்பதன் அர்த்தத்தை நபி(ஸல்)அவர்கள் பின்வரும் நபிமொழியில் தெளிவுபடுத்தியுள்ளார்கள்: புறம் பேசுதல் என் றால் என்ன? என்று நீங்கள் அறிவீர்களா? என நபி(ஸல்) அவர் கள் (தம் தோழர்களிடம்)கேட்டார்கள். அதற்கவர்கள் அல்லாஹ் வும் அவன் தூதருமே நன்கறிந்தவர்கள் எனக் கூறினார்கள். பிறகு நபி(ஸல்)அவர்கள் (புறம் பேசுதல் என்பது)நீ உம் சகோத ரனைப் பற்றி அவன் விரும்பாததைக் கூறுவதாகும் என்று கூறி னார்கள். நான் கூறுவது என்னுடைய சகோதரனிடம் இருந் தாலுமா? எனக் கேட்கப்பட்டது. அதற்கவர்கள், நீ கூறுவது அவனிடம் இருந்தால் நீ அவனைப் பற்றி புறம் பேசிவிட்டாய். நீ கூறுவது அவனிடத்தில் இல்லையெனில் நீ அவனைப் பற்றி அவதூறு கூறிவிட்டாய் எனக் கூறினார்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா(ரழி), நூல்: முஸ்லிம்

எனவே புறமென்பது ஒரு முஸ்லிமைப் பற்றி அவனிடம் உள்ள- அவன் விரும்பாத தன்மைகளில் ஒன்றைக் கூறுவ தாகும். அவனுடைய உடல், மார்க்கம், உலக விவகாரம், குணநலன்கள், உடலமைப்பு என எது தொடர்பானதாகதாக அது இருந்தாலும் சரியே! இப்படிப் புறம் பேசுவதற்குப் பல முறைகள் உள்ளன. அவனுடைய குறைகளை அல்லது அவ னுடைய நடவடிக்கைகள் பழக்க வழக்கங்களைக் கேலியாக எடுத்துச் சொல்வதும் அவற்றுள் ஒன்றாகும்.

புறம் பேசுதல் என்பது அல்லாஹ்விடத்தில் மிக மோசமான விஷயமாக இருந்தும் மக்கள் இது விஷயத்தில் அலட்சியமா கவே நடந்து கொள்கின்றனர். பின்வரும் நபிமொழி இதை உணர்த்துகிறது. 'வட்டியில் எழுபத்திரண்டு வகைகள் உள் ளன. அவற்றில் மிகக் குறைந்தது ஒருவன் தன் தாயிடம் உட

லுறவு கொள்வதற்குச் சமமானதாகும். வட்டியிலேயே மிகக் கொடுமையானது தன் சகோதரனுடைய மானம் மரியாதைக்குப் பங்கம் ஏற்படுத்துவதாகும் என நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள். நூல்: (ஸில்ஸிலதுஸ் ஸஹீஹா1871)

ஆகவே சபையிலிருப்பவர் அங்கு நடக்கின்ற தீமையையும் தன் சகோதரனைப் பற்றி புறம் பேசப்படுவதையும் தடுப்பது கடமையாகும். இது பற்றி நபி(ஸல்)அவர்கள் பின்வரும் நபிமொழியில் இவ்வாறு ஆர்வமூட்டியுள்ளார்கள்: யார் தன்னுடைய சகோதரனின் கண்ணியம் மற்றும் மான மரியாதைக்கு களங்கம் ஏற்படுவதை விட்டும் தடுக்கின்றாரோ அவருடைய முகத்தை அல்லாஹ் மறுமையில் நரகத்தை விட்டும் தடுப்பான். (நபிமொழி) அறிவிப்பவர்: அபுத்தர்தா (ரழி), நூல்: திர்மிதி

## கோள் சொல்லுதல்

மக்களிடையே குழப்பம் விளைவிப்பதற்காக ஒருவர் கூறியதை இன்னொருவரிடம் சொல்வதே கோள் ஆகும். கோள் சொல்லித் திரிவதை சிலர் தொழிலாகக் கொண்டுள்ளனர். இது மக்களிடையே விரோதத்தையும் குரோதத்தையும் மூட்டி விடுவதற்கும் அவர்களுக்கிடையே உள்ள நல்லுறவைத் துண்டிப்பதற்கும் மிகப் பெரிய காரணமாகும். இவ்வாறு செய்பவனை அல்லாஹ் இழித்துரைத்துள்ளான்:

அதிகமாக சத்தியம் செய்கின்ற அற்பமான எந்த மனிதனுக்கும் நீர் அடங்கிவிடாதீர். அவன் குறை கூறித் திரிபவனாகவும் கோள்ச் சொல்லித் திரிபவனாகவும் இருக்கின்றான். (68:10,11) கோள்ச் சொல்லத் திரிபவன் சொர்க்கம் செல்ல மாட்டான் என்பது நபிமொழி அறிவிப்பவர்: ஹுதைஃபா (ரழி) நூல்: புகாரி

இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிப்பதாவது: நபி(ஸல்) அவர்கள் மக்கா அல்லது மதீனாவில் ஒரு தோட்டத்தின் பக்கமாகச்

சென்று கொண்டிருந்தபோது கப்ரில் வேதனை செய்யப்படும் இரண்டு மனிதர்களின் சப்தத்தைச் செவியுற்றார்கள். அப் போது இவ்விருவரும் வேதனை செய்யப்படுகின்றார்கள். (ஆனால்)ஒரு பெரிய விஷயத்திற்காக இவ்விருவரும் வேதனை செய்யப்படவில்லை என்று கூறிவிட்டு,ஆம்! (இதைத் தொடர்ந்து வேறொரு அறிவிப்பில் 'அது பெரிய விஷயம் தான்' என்று வந்துள்ளது)அவ்விருவரில் ஒருவர் சிறு நீர் கழிக்கும் போது(சிறு நீர்த்துளி தன்னில் படாமல்)பேணுதலாக இருக்க வில்லை. மற்றொருவர் கோள் சொல்லித் திரிபவராக இருந் தார் என்று கூறினார்கள். (புகாரி)

கோள் சொல்வதில் மிக மோசமானது கணவனைப் பற்றி மனைவியிடத்திலும், மனைவியைப் பற்றி கணவனிடத்திலும் குறை கூறித் திரிவதாகும். அவ்விருவருக்கிடையே உள்ள நல்லுறவைக் கெடுப்பதற்கான முயற்சியாகும் இது. அது போல பணியாளர்கள் தம் சக பணியாளர்களைப் பற்றி - அவர் களுக்கு இடைஞ்சலை ஏற்படுத்துவதற்காக - மேனேஜரிடம் அல்லது ஏனைய பொருப்பாளரிடம் கோள் சொல்கின்றனர். இதுவும் மோசமான தாகும். இவையனைத்துமே விலக்கப் பட்டவையாகும்.

## அனுமதியின்றி வீட்டுக்குள் எட்டிப் பார்த்தல்

இறைநம்பிக்கை கொண்டவர்களே! உங்களுடைய வீடுக ளைத் தவிர மற்றவர்களின் வீடுகளில் அந்த வீட்டாரின் இசை வைப் பெறாமலும் அவர்களுக்கு ஸலாம் கூறாதவரையும் நுழையாதீர்கள். (24:27)

அனுமதி கோருவதற்குகக் காரணம் அந்த வீட்டிலுள்ளவர் களின் தனிப்பட்ட செயல்களை காரியங்களை பார்த்து விடக் கூடாது என்பதற்காகத் தான் என்பதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்)அவர்கள் தெளிவுபடுத்தியுள்ளார்கள். 'அனுமதி கோரு

தல் ஏற்படுத்தப்பட்டது பார்வையின் காரணமாகத் தான்' என்பது நபிமொழி. (புகாரி)

இன்று வீடுகள் கட்டிடங்கள் நெருக்கமாகவும் ஒன்றோடு ஒன்று சேர்ந்தும் இருக்கின்றன. ஜன்னல்களும் வாசல்களும் நேருக்கு நேர் உள்ளன. இதனால் அக்கம் பக்கத்தில் வசிப் போரின் தனிப்பட்ட நடவடிக்கைகள் பரஸ்பரம் பார்வையில் படும் சாத்தியக்கூறு அதிகம் உள்ளன. பெரும் பாலோர் தங்கள் பார்வைகளைத் தாழ்த்திக் கொள்வதில்லை. சில போது உயரமான கட்டிடத்தில் குடியிருப்பவர்கள் சிலர் தம் ஜன்னல் வழியாகவும் மாடி வழியாகவும் தமக்குக் கீழே இருக் கின்ற அண்டை வீடுகளை எட்டிப் பார்க்கின்றனர். இது நம் பிக்கைத் துரோகமாகும். மட்டுமல்ல இது அண்டை வீட்டா ரின் கண்ணியத்தைக் குலைக்கக்கூடியதாகவும் தகாத காரி யத்தின் பால் இட்டுச் செல்லக் கூடியதாகவும் இருக்கின்றது. இதனால் எத்தனையோ துன்பங்களும், குழப்பங்களுமே ஏற் பட்டுள்ளன. இச்செயல் எந்த அளவுக்கு ஆபத்தானது என்ப தற்குச் சான்றாக பிறருடைய வீட்டில் எட்டிப் பார்ப்பவருடைய கண்ணுக்கான நஷ்டயீட்டை ஷரீஅத் தளர்த்தியிருப்பதே போதுமானதாகும்.

இதோ அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியுள்ளார்கள்: ஒரு வர் பிறருடைய வீட்டில் அனுமதியின்றி எட்டிப் பார்த்தால் அவருடைய கண்ணைப் பறிப்பது அவ்வீட்டாருக்கு ஆகுமான தாகும். அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரழி), நூல்: முஸ்லிம்.

அஹ்மதுடைய ஒரு அறிவிப்பில் 'அவருடைய கண்ணைப் பறித்து விடுங்கள். அதற்கு நஷ்டயீடோ, பழிக்குப் பழியோ கிடையாது' என்றும் உள்ளது.

## இரண்டு பேர் இரகசியம் பேசுதல்

அதாவது மூவரில் ஒருவரைப் புறக்கணித்து விட்டு இருவர் மட்டும் இரகசியம் பேசுதல். இது சபைக்குக் கேடுவிளைவிப் பவைகளில் ஒன்றாகும். மேலும் முஸ்லிம்களுக்கு மத்தியில் பிரிவினையையும் விரோதத்தையும் குரோதத்தையும் தோற்று விப்பதற்காக ஷைத்தான் செய்யும் ஒரு சூழ்ச்சி ஆகும்.

இதன் சட்ட நிலையையும் காரணத்தையும் தெளிவுபடுத்தி யவாறு நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்: நீங்கள் மூன்று பேர் இருந்தால் ஒருவரைப் புறக்கணித்து விட்டு இருவர் மட்டும் இரகசியம் பேசாதீர்கள்-மற்றவர்களும் வந்து நீங்கள் எல்லோ ரும் கலந்திருந்திடும் வரையில்! ஏனெனில் அது அவருக்கு மனம் வருந்தச் செய்யும். அறிவிப்பவர்: இப்னு மஸ்வூத்(ரழி), நூல்: புகாரி

நால்வர் இருக்கும்போது மூவர் மட்டும் இரகசிம் பேசுவ தையும், ஐவர் இருக்கும் போது நால்வர் மட்டும் இரகசியம் பேசுவதையும்,இப்படியாக ஒருவரை விட்டு விட்டு மற்றவர்கள் சேர்ந்து இரகசிம் பேசுவதையும் இது உள்ளடக்கும். இது போல மூன்றாமவருக்குத் தெரியாத மொழியில் இருவர் இரக சிம் பேசுவதையும் இது உள்ளடக்கும். இப்படியாக ஒருவரை விட்டு விட்டு மற்றவர்கள் இரகசியம் பேசுவது ஒரு வகையில் அவரை அற்பமாகக் கருதுவதாக அமையும். அல்லது தன் னைப் பற்றி அவர்கள் தவறாகப் பேசுகிறார்களோ என்பது போன்று அவர் எண்ணத் தோன்றும் என்பதில் ஐயமில்லை.

## கணுக்காலுக்குக் கீழ் ஆடை அணிதல்

மக்கள் சாதாரணமாகக் கருதக்கூடிய விஷயங்களில் இது வும் ஒன்றாகும். ஆனால் அது அல்லாஹ்விடம் மிகப் பெரிய விஷயமாகும். சிலர் தரையைத் தொடுமளவுக்கு ஆடை அணி

கின்றனர். இன்னும் சிலர் தமது ஆடையைத் தரையோடும் இழுத்துச் செல்கின்றனர்.

அபூதர் (ரழி) அறிப்பதாவது: மறுமையில் அல்லாஹ் மூவரிடத்தில் பேசவும் மாட்டான், அவர்களைப் பார்க்கவும் மாட்டான், அவர்களைத் தூய்மைப்படுத்தவும் மாட்டான், அவர்களுக்கு நோவினை மிக்க வேதனையுண்டு. (அவர்கள் யாரெனில்) கணுக்காலுக் கீழ் ஆடை அணிபவன், செய்த தர்மத்தைச் சொல்லிக் காட்டுபவன், பொய் சத்தியம் மூலம் பொருளை விற்பவன் என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். (புகாரி)

நான் கணுக் காலுக்குக் கீழ் ஆடை அணிந்திருப்பது பெருமைக்காக அல்ல என்று கூறுபவர் தம்மைத் தாமே பரிசுத்தப் படுத்திக் கொள்கின்றார். இது ஏற்கத்தக்கதல்ல. ஏனெனில் கணுக் காலுக்குக் கீழ் ஆடை அணிபவர் விஷயத்தில் வந்திருக்கின்ற எச்சரிக்கை பொதுவானது தான். அவர் பெருமைக்காக அணிந்தாலும் சரி அல்லது வேறு நோக்கத்திற்காக அணிந்தாலும் சரி. பின்வரும் நபிமொழி இதைத் தான் அறிவிக்கிறது. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: கணுக்காலுக்குக் கீழ் ஆடை அணிவது நரகத்திற்குக் கொண்டு போகும். அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரழி), நூல்: புகாரி

ஆனால் அவர் பெருமைக்காக அணிந்தால் அவருடைய தண்டனை மிகக் கடுமையாக இருக்கும். அது குறித்து பின் வரும் நபிமொழியில் வந்துள்ளதாவது: பெருமைக்காக யார் தன்னுடைய ஆடையை தரையோடு இழுத்துச் செல்கின்றாரோ மறுமையில் அல்லாஹ் அவரைப் பார்க்க மாட்டான் என நபி (ஸல்) கூறினார்கள். அறிவிப்பவர்: இப்னு உமர் (ரழி), (புகாரி)

இது ஏனெனில் இதில் (கணுக்காலுக்குக் கீழ் ஆடை அணிதல், பெருமை என) விலக்கப்பட்ட இரு விஷயங்கள் ஒரு சேர அமைந்துள்ளன.

கணுக்காலுக்குக் கீழ் ஆடை அணிவது ஹராமென்பது எல்லா வகையான ஆடைகளுக்கும் பொருந்தும். இப்னு உமர் (ரழி) அறிவிக்கும் பின்வரும் நபிமொழி இதற்குச் சான்றாகும்.

'கணுக் காலுக்குக் கீழ் ஆடை அணிவதென்பது வேட்டி, சட்டை, தலைப்பாகை ஆகிய மூன்றிலும் அடங்கும். இவற்றில் ஒன்றை யாரேனும் பெருமைக்காக தரையோடு இழுத்துச் செல்கின்றாரோ அவரை மறுமையில் அல்லாஹ் பார்க்க மாட்டான்' (நபிமொழி), நூல்: அபூதாவூத்

ஆனால் ஒரு பெண் தனது பாதத்தை மறைப்பதற்காக தம் ஆடையை கணுக்காலுக்குக் கீழ் ஒரு ஜாண் அல்லது ஒரு முழம் தொங்கவிட்டுக் கொள்வது அனுமதிக்கப்பட்டுள்ளது. இது, காற்று போன்ற காரணத்தால் பாதம் வெளிப்பட்டு விடாமல் பேணிக்கையாக இருப்பதற்காகவாகும். ஆயினும் அளவு கடந்துவிடக் கூடாது. உதாரணமாக திருமணத்தின் போது சில மணப் பெண்களின் ஆடைகள் பல ஜாண்கள், பல மீட்டர்கள் நீளமாக இருக்கின்றன. எந்த அளவுக்கெனில் சிலபோது மணப் பெண்ணுக்குப் பின்னால் ஒருவர் அந்த ஆடையை சுமந்து வரவேண்டியதிருக்கிறது.

## ஆண்கள் தங்கம் அணிதல்

'பட்டும் தங்கமும் என் சமுதாயத்தில் பெண்களுக்கு ஆகுமாக்கப்பட்டுள்ளன. ஆண்களுக்கு தடை செய்யப்பட்டுள்ளன' நபிமொழி. அறிவிப்பவர்: அபூமூஸா (ரழி), (அஹ்மத்)

இன்று கடைவீதிகளில் ஆண்களுக்கென்று தங்கத்தால் - பல்வேறு காரட்களில்- தயாரிக்கபட்ட அல்லது முழுமையாக தங்க முலாம் பூசப்பட்ட கைக்கடிகாரங்கள், மூக்குக் கண்ணாடிகள், பட்டன்கள், போனாக்கள், செயின்கள், சாவிக் கொத்துகள் இன்னும் பல உள்ளன. இவை யாவும் தடை செய்யப்பட்டவையாகும். சில போட்டிகளில் ஆண்கள் அணியும் தங்

கக்கைக்கடிகாரம் பரிசாக அறிவிக்கப்படுகின்றன. இதுவும் தடை செய்யப்பட்டதாகும்.

இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கிறார்கள்: ஒரு மனிதரின் கையில் தங்க மோதிரத்தைக் கண்ட நபி (ஸல்) அவர்கள் அதைக் கழற்றி எறிந்து விட்டு, உங்களில் யாரேனும் தீக்கங்கை எடுத்து அதைத் தனது கையில் வளையமாக அணிவதை விரும்புவாரா? என்று கேட்டார்கள். நபி (ஸல்) அவர்கள் சென்ற பிறகு, 'அந்த மோதிரத்தை எடுத்து வேறு வழியில் பயன்படுத்திக்கொள்' என்று அந்த மனிதரிடம் சொல்லப்பட்டது. அதற்கவர், அல்லாஹ்வின் தூதர் அவர்கள் அதைத் தூர எறிந்திருக்க அல்லாஹ்வின் மீது ஆணையாக ஒருபோதும் அதை நான் எடுக்க மாட்டேன் எனக் கூறினார். (முஸ்லிம்)

## பெண்கள் சிறிய, மெல்லிய, இறுக்கமான ஆடை அணிதல்

இன்றைய காலத்தில் நம்முடைய எதிரிகள் நவீன, நவநாகரீக உடைகளை பல்வேறு மாடல்களிலும், டிசைன்களிலும் தயாரித்து முஸ்லிம்களுக்கு மத்தியில் பரவவிட்டுள்ளதன் மூலம் நமக் கெதிராகப் போர்ப் பிரகடனம் செய்துள்ளனர். இவ்வுடைகள் சிறிய அளவிலோ, மெல்லியதாகவோ அல்லது இறுக்கமானதாகவோ இருப்பதால் மறைக்கப்பட வேண்டிய அங்கங்களை மறைப்பதில்லை. இவற்றில் பெரும்பாலான உடைகளை பெண்கள் தம் சக பெண்களுக்கு மத்தியிலும் நெருங்கிய உறவினர்களுக்கு மத்தியிலும் கூட அணிவது கூடாது. இத்தகைய உடைகள் பெண்களிடம் இறுதிக்காலத்தில் தோன்று மென்பதை நபி (ஸல்) அவர்கள் நமக்கு அறிவித்துள்ளனர். அந்த நபிமொழி வருமாறு:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: நரகவாசிகளில் இரு பிரிவினர் உள்ளனர். அவர்களை நான் பார்த்

ததில்லை. ஒரு பிரிவினர்: அவர்களிடம் பசு மாட்டின் வால்களைப் போன்ற சாட்டைகள் இருக்கும். அவற்றைக் கொண்டு மக்களை அடிப்பார்கள். மற்றொரு பிரிவினர் பெண்களாவர். அவர்கள் ஆடை அணிந்தும் நிர்வாணமாக இருப்பார்கள். தாமும் மையல் கொண்டு பிறரையும் மையல் கொள்ளச் செய்யக்கூடிய அவர்களின் கொண்டை ஒட்டகத்தின் திமில்போல ஒய்யாரமாக இருக்கும். அப்பெண்கள் சுவனம் செல்ல மாட்டார்கள். அதன் வாடையைக்கூட நுகர மாட்டார்கள். உண்மையில் அதன் வாடை இவ்வளவு இவ்வளவு தூரத்திலிருந்து வருகின்றது. (முஸ்லிம்)

இத்தகைய ஆடைகளில் இன்று சில பெண்கள் அணியக் கூடிய ஆடைகளும் அடங்கும். அந்த ஆடைகள் கீழிருந்து மேல் வரை திறந்திருக்கும். அல்லது பல இடங்களில் ஜன்னல்கள் (ஓட்டைகள்) விடப்பட்டிருக்கும். அவள் அமரும்போது மறைக்கப்பட வேண்டிய உறுப்புகள் வெளியே தெரியும். மட்டுமல்ல இத்தகைய ஆடைகளை அணிவது காஃபிர்களுக்கு ஒப்பானதாகவும் அவர்களின் கலாச்சாரத்திலும் அவர்கள் உருவாக்கிய அநாகரிகத்திலும் அவர்களை பின்பற்றுவதாகவும் அமையும். அல்லாஹ் பாதுகாப்பானாக!

அதுபோல ஆபத்தான விஷயம் என்னவெனில் சில ஆடைகளில் பாடகர்கள், இசைக்கருவிகள், மதுப்புட்டிகள், மதுக் கிண்ணங்கள், உயிர்ப்பிராணிகளின் உருவங்கள், சிலுவைகள், தீய கிளப்கள் மற்றும் அமைப்புகளின் அடையாளச் சின்னங்கள், அல்லது கண்ணியத்தையும், நன்னடத்தையையும் கெடுக்கும் விதமான வாசகங்கள் இருப்பதாகும். அவ்வாசகங்கள் பெரும்பாலும் அந்நிய மொழிகளில் எழுதப்பட்டிருக்கும்.

## ஒட்டு முடி வைத்தல்

அபூபக்ருடைய மகள் அஸ்மா (ரழி) அறிவிப்பதாவது: ஒரு பெண் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, அல்லாஹ்வின் தூதரே! என்னுடைய மகள் புதிதாக மணமுடிக்கப்பட்டிருக்கிறாள். அவளது தலையில் புண் ஏற்பட்டு முடி கொட்டுகிறது. நான் அவளுக்கு ஒட்டு முடி வைக்கலாமா? எனக் கேட்டாள். அதற்கவர்கள், ஒட்டு முடி வைப்பவளையும், வைத்து விடுபவளையும் அல்லாஹ் சபிப்பானாக! எனக் கூறினார்கள். (முஸ்லிம்)

நபி (ஸல்) அவர்கள் ஒரு பெண் தனது தலை முடியுடன் வேறு முடியை வைத்துக் கொள்வதைக் கண்டித்துள்ளார்கள் என ஜாபிர் (ரழி) அறிவிக்கிறார்கள். (முஸ்லிம்)

இன்று நம்முடைய காலத்தில் விக் (Wig) என்று சொல்லப்படக்கூடிய 'டோபா' வையும் ஒட்டு முடிக்கு உதாரணமாகச் சொல்லலாம். மேலும் இக்காலத்தில் ஒட்டு முடி (சவுரி) வைத்து விடும் பெண்களுக்கு முடி ஒப்பனைக்காரிகள் என்று கூறப்படுகிறது. மேலும் அழகு நிலையங்களில் (Beauty Parlour) பெண்கள் அலங்கரித்துக் கொள்ளக்கூடிய அனைத்தும் விலக்கப்பட்டவைகளைச் சோர்ந்ததாகும். மட்டுமல்ல துர்ப்பாக்கிய சாலிகளான நடிகர், நடிகைகள் சினிமாக்களிலும், நாடகங்களிலும் பயன்படுத்தக்கூடிய டோபாக்களும் இதில் அடங்கும்.

## நடை, உடை, பாவனையில் ஆண், பெண்ணுக்கும் பெண், ஆணுக்கும் ஒப்பாகுதல்

அல்லாஹ் மனிதர்களுக்கு ஏற்படுத்தியிருக்கின்ற இயற்கை சுபாவம் என்னவெனில் ஒரு ஆண், எந்த ஆண்மையின் மீது அல்லாஹ் அவனைப் படைத்தானோ அந்த ஆண்மையையும் ஒரு பெண், எந்தப் பெண்மையின் மீது அல்லாஹ் அவளைப் படைத்தானோ அந்தப் பெண்மையையும் பேணிப் பாதுகாப்ப

தாகும். இது, மனிதர்களின் வாழ்கை எந்தக் காரண காரியங்க ளைக் கொண்டல்லாமல் சீர் பெற முடியாதோ அந்தக் காரண காரியங்களில் ஒன்றாகும்.

எனவே ஆண்கள் பெண்களுக்கும் பெண்கள் ஆண்களுக் கும் ஒப்பாகப் பாவித்து நடப்பது இயற்கைக்கு முரணானதா கும். மேலும் இது குழப்பத்தின் வாயில்களைத திறந்து விடுவ தாகவும், சமுதாயத்தில் பிளவு ஏற்படுவதற்குக் காரணமாக வும் அமையும். இச்செயல் மார்க்கத்திலும் விலக்கப்பட்டதா கும். ஏனெனில் ஒரு செயலைச் செய்வது சாபத்திற்குரியது என மார்க்க ஆதா ரம் கூறினால் அது ஹராம் என்பதையே குறிக்கும். மட்டுமல்ல அது பெரும் பாவமும் ஆகும். இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கக் கூடிய ஒரு நபி மொழியில் இவ்வாறு வந்துள்ளது: ஆண்களில் பெண்களைப் போல் ஒப்பனை செய்து கொள்பவர்களையும் பெண்களில் ஆண்களைப் போல் ஒப்பனை செய்து கொள்ப வர்களையும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சபித்துள் ளார்கள். (புகாரி)

பெண்களைப் போல் நடக்கும் ஆண்களையும் ஆண்க ளைப் போல் நடக்கும் பெண்களையும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சபித்துள்ளார்கள் எனவும் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கிறார்கள். (புகாரி, திர்மிதி)

ஒப்புமை என்பது அங்க அசைவுகளிலும் இருக்கலாம் நடையிலும் இருக்கலாம். உதாரணமாக உடலில், நடையில், பேச்சில் பெண்களைப் போல் நடந்து கொள்ளுதல். மேலும் ஒப்புமை உடையிலும் இருக்கலாம். அதுபோல பெண்கள் அணியக்கூடிய நகைகள், வளையல்கள், காதணிகள், கால ணிகள் போன்றவற்றை ஆண் அணிவதும் கூடாது - ஹிப்பி வகையறாக்களிடம் இந்நிலை பரவி உள்ளது போல. அது போன்றே ஆண்களுக்குரிய ஆடையை பெண்கள் அணிவதும் ஆகுமானதன்று. மாறாக பெண்கள் உடை, நடை, பாவனை

களில் ஆண்களுக்கு மாறாக நடந்து கொள்வது கடமையா கும். இதற்கு பின்வரும் நபிமொழி சான்றாகும்.

பெண்ணுடைய ஆடையை அணிகின்ற ஆணையும் ஆணு டைய ஆடையை அணிகின்ற பெண்ணையும் அல்லாஹ் சபிப்பா னாக! (நபிமொழி) அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரழி), அபூதாவூத்

## சிகைக்கு கருப்புச் சாயம் பூசுதல்

சரியாகச் சொல்வதென்றால் இது ஹராமாகும். ஏனெனில் இது குறித்து நபிமொழியில் எச்சரிக்கை வந்துள்ளது. புறாக் களின் (கருத்த) மார்புப் பகுதியைப் போல் சிகைக்கு கருப்புச் சாயம் பூசுகின்ற ஒரு கூட்டம் இறுதிக் காலத்தில் தோன்றுவர். அவர்கள் சுவர்க்கத்தின் வாடையை நுகர மாட்டார்கள் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்ப வர்: இப்னு அப்பாஸ் (ரழி), நூல்: அபூதாவூத், நஸயீ

முடி நரைத்தோர்களில் பெரும்பாலோரிடம் இச்செயல் பரவ லாகக் காணப்படுகின்றது. தங்கள் நரையைக் கருப்புச்சாயம் பூசி அவர்கள் மாற்றிவிடுகின்றனர். இவர்களது இச்செயல் பல தீமைகளின் பால் இட்டுச்செல்கின்றது. ஏமாற்றுதல், அல்லாஹ் படைத்த அமைப்பை மாற்றுதல், தன்னுடைய எதார்த்த நிலை யை மறைத்து பொய்யான தோற்றத்தைக் காட்டுதல் ஆகிய வை அத்தீமைகளிற் சில. மனிதனுடைய பண்பாட்டின் மீது ஒரு தீய தாக்கத்தை இது ஏற்படுத்தும் என்பதில் சந்தேக மில்லை. சிலபோது இதனால் ஒரு வகையான ஏமாற்றத்திற் குக் கூட அவன் ஆளாகலாம்.

நபி (ஸல்) அவர்கள் தமது நரையை மருதாணி போன்றவற் றால் - அதாவது மஞ்சள் அல்லது சிவப்பு அல்லது பழுப்பு நிறத்தால்- மாற்றியிருக்கிறார்கள் என்பதற்கு ஆதாரப்பூர்வ மான ஹதீஸ் உள்ளது.

மக்கா வெற்றி கொள்ளப்பட்ட தினத்தில் நபி(ஸல்)அவர்களிடம் அபூகுஹாஃபா (அபூபக்கர்(ரழி)யின் தந்தை) கொண்டு வரப்பட்டார்கள். அவருடைய தலையும் தாடியும் அதிக வெளுப்பின் காரணத்தால் வெண்ணிறப் பூக்கள், காய்கள் கொண்ட செடியைப் போன்று வெளுத்துப் போய் இருந்தது. (இதைக் கண்ட)நபி(ஸல்)அவர்கள், இந்த நரையை ஏதாவது வண்ணம் கொண்டு மாற்றுங்கள். கருப்பைத் தவிர்த்துக் கொள்ளுங்கள் எனக் கூறினார்கள். அறிவிப்பவர்: ஜாபிர் (ரழி), நூல்: முஸ்லிம்.

இவ்விஷயத்தில் பெண்ணும் ஆணைப் போன்றுதான். அவளும் தனது முடிக்கு கருப்புச் சாயம் பூசக் கூடாது என்பதே சரியான முடிவாகும்.

## உயிருள்ளவற்றின் உருவங்களை வரைதல்

ஆடைகள், சுவர்கள், காகிதங்கள் போன்றவற்றில் உயிருள்ளவற்றின் உருவங்களைத் தீட்டுவது ஹராமாகும். மறுமையில் அல்லாஹ்விடத்தில் கடுமையான வேதனைக்குரியவர்கள் உருவங்களைத் தீட்டுபவர்களே என்பது நபிமொழி. அறிவிப்பவர்: இப்னு மஸ்வூத் (ரழி), நூல்: புகாரி

நான் படைப்பதைப் போன்று படைக்க முற்படுபனைவிட அநியாயக்காரன் யார் இருக்க முடியும்? ஒரு வித்தையேனும் அல்லது ஒரு சிறு எறும்பையேனும் அவர்கள் படைக்கட்டுமே! (முடியுமா?) என அல்லாஹ் கூறுவதாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்)அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரழி) நூல்: புகாரி, முஸ்லிம்

உருவங்கள் வரையக் கூடியவர்கள் அனைவரும் நரகம் செல்வர். அல்லாஹ் அவன் வரைந்த ஒவ்வொரு உருவத்துக்கும் உயிரைக் கொடுப்பான். பிறகு அது அவனை நரகில் வேதனை செய்யும் என அல்லாஹ்வின் தூதர் (ஸல்)அவர்கள்

கூறினார்கள். எனவே நீ வரைந்து தான் ஆகவேண்டு மென்றால் மரங்களையும் உயிரற்றவைகளையும் வரைவீராக! என இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கிறார்கள். (முஸ்லிம்)

இந்த நபிமொழிகள் யாவும் உயிருள்ள மனிதர்கள் மற்றும் ஏனைய உயிரினங்களின்- அவற்றுக்கு நிழல் இருந்தாலும் சரி இல்லாவிட்டாலும் சரி- உருவங்களை வரைவது ஹறாம் என அறிவிக்கின்றன. அவ்வுருவங்கள் அச்சிடப்பட்டாலும் சரி, வரையப்பட்டாலும் சரி, குடைந்தெடுக்கப்பட்டாலும் சரி, பொறிக்கப்பட்டாலும் சரி, செதுக்கப்பட்டாலும் சரி, அல்லது அச்சில் வார்த்தெடுக்கப்பட்டாலும் சரி ஹறாம்தான். இவ்வனைத்தையும் உள்ளடக்கும் வகையில் ஹதீஸ்கள் பொதுவாக வந்துள்ளன.

முஸ்லிமைப் பொருத்த வரையில் மார்க்க ஆதாரத்துக்கு அவன் கீழ்ப்படிய வேண்டும். உருவங்கள் வரைவதிலிருந்து தவிர்ந்து கொள்ள வேண்டும். அதை நான் வணங்கவா போகிறேன், அதற்கு நான் சிரம் பணியவா போகிறேன் என்று குதர்க்கம் பேசக் கூடாது. நம்முடைய இந்தக் காலத்தில் உருவப் படங்கள் பல்கிப் பெருகியிருப்பதன் விளைவால் ஏற்பட்ட ஒரே ஒரு தீமையை மட்டும் ஒரு புத்திசாலி தெளிந்த நோக்குடன் சிந்தித்துப் பார்த்தால் இதை ஏன் ஷரீஅத் தடை செய்திருக்கின்றது என்பதன் தத்துவம் தெரியவரும். அது இதுதான், அதனால் பெரும் தீமைகள் விளைகின்றன. உணர்ச்சிகள் தூண்டப்படுகின்றன. இச்சைகள் கிளரப்படுகின்றன. உண்மையைச் சொல்வதானால் சில உருவப்படங்களின் காரணமாக மானக்கேடான காரியங்களில் வீழ்ந்திட நேரிடுகின்றது. (ஏக இறைவனை விடுத்து உருவங்களை வழிபடுவதன் பால் இந்த உருவ(பட)ங்களே இழுத்துச் செல்கின்றன என்றால் அது மிகையாகாது.)

எனவே ஒரு முஸ்லிம் உயிருள்ளவற்றின் உருவப்படங்களை தன் வீட்டில் பத்திரப்படுத்தி வைத்துக் கொள்ளக் கூடாது. அவற்றை அகற்றி விடுவது அவசியமாகும். காரணம் அவனுடைய வீட்டில் மலக்குகள் நுழைவதற்கு அது தடையாக ஆகிவிடக் கூடாது என்பதற்காக. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: நாய் மற்றும் உருவப்படங்கள் உள்ள வீட்டில் வானவர்கள் நுழையமாட்டார்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரழி), நூல்: புகாரி

சில வீடுகளில் உருவச் சிலைகளைக் காணலாம். அவற்றுள் சில, காஃபிர்கள் வணங்கக்கூடிய தெய்வங்களாக உள்ளன. இவை அன்பளிப்பாகக் கிடைத்துள்ளன, அலங்காரத்திற்காக வைத்துள்ளோம் என்று கூறுகின்றனர். மற்றவைகளை விட இவை கடுமையான ஹராமாகும். அது போல சுவரில் மாட்டப்படாத உருவப்படங்களை விட சுவரில் மாட்டப்பட்ட உருவப்படங்கள் கடுமையான ஹராமாகும். ஏனெனில் எத்தனையோ உருவப்படங்கள் மதிப்பு, மரியாதைக்கு இட்டுச் செல்வதைப் பார்க்கிறோம். எத்தனையோ உருவப் படங்கள் மறந்து போன துக்கத்தையும் துயரத்தையும் மீண்டும் ஞாபகப்படுத்துகின்றன. எத்தனையோ உருவப்படங்கள் முன்னோர்கள் குறித்து பெருமையடிப்பதன் பால் இட்டுச் செல்கின்றன. மேலும் உருவப்படங்களை ஞாபகார்த்தமாக வைத்திருக்கிறோம் என்றும் கூற முடியாது. ஏனெனில் உண்மையில் முஸ்லிமான நண்பர், உறவினர் தொடர்பான உள்ளத்தின் உண்மையான நினைவு கூரல் என்பது அவருக்காக மன்னிப்பையும் அருளையும் வேண்டிப் பிரார்த்திப்பதாகும்.

ஆகவே ஒரு முஸ்லிம் இத்தகைய உருவங்களை அகற்றுவதோ அல்லது அழிப்பதோ அவசியமாகும். ஆனால் அப்படி அகற்றுவது முடியாத காரியமாக இருந்தாலே தவிர! அதில் அளவு கடந்த சிரமம் இருந்தாலே தவிர! உதாரணமாக

சரக்குகள் உள்ள பாக்கட்டுகள், கேன்கள், டின்கள், பய னுள்ள புத்தகங்கள், அகராதிகள் போன்ற பல்வேறு பொருட் களில் உருவங்களைப் போடுவது இன்று உலகெங்கும் பரவி யுள்ள தீமையாகிவிட்டது! என்றாலும் அவற்றை நீக்குவதற்கு முடிந்த அளவு முயற்சிக்க வேண்டும். சில பொருட்களிலுள்ள தவறான படங்களையும் தவிர்க்க வேண்டும். அல்லது எச்ச ரிக்கையாக இருக்க வேண்டும்.

சில அவசியத் தேவைகளுக்காக உருவப்படங்களைப் பத்திரப்படுத்தி வைத்துக் கொள்வதில் தவறில்லை. உதார ணமாக பாஸ்போர்ட், அடையாள அட்டை போன்ற அரசு ஆவ ணங்களில் உள்ள உருவங்களைப் போல. சில அறிஞர்கள், மதிப்பளிக்கப்படாமல் கால்களால் மிதிபடக்கூடிய உருவங் களுக்கு அனுமதி வழங்கியுள்ளனர். அல்லாஹ் கூறுகிறான்: உங்களால் முடிந்த வரை அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். (64:16)

## கனவில் பொய்யுரைத்தல்

சிலர் காணாத கனவுகளைக் கண்டதாக இட்டுக்கட்டிக் கூறுகின்றனர். மக்களுக்கு மத்தியில் நற்பெயரையோ, சிறப்பை யோ பெறுவதற்காக, அல்லது பொருளாதார இலாபம் பெறு வதற்காக அல்லது தம் எதிரிகளை அச்சுறுத்துவதற்காக இன்னும் இதுபோன்ற நோக்கங்களுக்காக இவ்வாறு செய் கின்றனர். பெரும்பாலான பாமரர்களுக்கு கனவுகளில் அதிக நம்பிக்கையும் ஈடுபாடும் உள்ளது. அதனால் இப்பொய்க் கன வுகள் மூலம் அவர்கள் ஏமாற்றப்படுகிறார்கள். காணாத கன வுகளைக் கண்டதாகக் கூறுகின்றவர்களுக்கு ஹதீஸ்களில் கடுமையான எச்சரிக்கை வந்துள்ளது.

நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்: ஒருவன் தன்னுடைய தந்தையை விடுத்து வேறொருவருடன் தன்னை இணைத்துச்

சொல்வதும், தான் காணாத கனவைக் கண்டதாகச் சொல் வதும், அல்லாஹ்வின் தூதர் கூறாததைக் கூறியதாகச் சொல் வதும் மிகப் பெரும் அவதூறாகும். அறிவிப்பவர்: வாஸிலா பின் அஸ்கஃ (ரழி), நூல்: புகாரீ.

இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிப்பதாவது: தாம் காணாத கன வைக் கண்டதாக் கூறுபவர் (மறுமையில்) இரண்டு கோதுமை மணிகளைச் சேர்த்துக் கட்டுமாறு வற்புறுத்தப்படுவார். அவ ரால் அதைக் கட்ட முடியாது என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். (புகாரீ) இரண்டு கோதுமை மணிக ளைச் சேர்த்துக் கட்டுவதென்பது அசாத்தியமான காரியமா கும். செய்த (பாவத்) தைப் போலவே தண்டனையும் இருக்கும்!

## கப்ரின் மீது அமர்தல், மிதித்தல், அடக்கஸ்தலங்களில் மல ஜலம் கழித்தல்

உங்களில் ஒருவர் நெருப்பின் மீது அமர்ந்து அது அவ ருடைய ஆடையை எரித்து தோலையும் பதம் பார்ப்பது கப்ரின் மீது அமர்வதை விட சிறந்தது என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரழி) நூல்: முஸ்லிம்

கப்ருகளை மிதித்தல்: சிலர் அவ்வாறு செய்கின்றனர். இறந்தவர்களை அடக்கம் செய்யும்போது நீங்கள் அவர்க ளைக் காணலாம், அருகிலுள்ள கப்ருகளை மிதிப்பதை சற் றும் பொருட்படுத்த மாட்டார்கள். சிலபோது செருப்புக் கால்க ளுடன் மிதிப்பார்கள்- அங்கு அடக்கம் செய்யப்பட்டோருக்கு எந்த மரியாதையும் கொடுக்காமல் இவ்வாறு செல்வார்கள். இது எவ்வளவு பெரிய பாவம் என்பதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இவ்வாறு கூறியுள்ளார்கள்: நெருப்பின் மீதோ அல்லது (கூரிய) வாளின் மீதோ நான் நடப்பது அல்லது எனது

செருப்பை எனது காலுடன் சேர்த்து நான் தைத்து விடுவது ஒரு முஸ்லிமின் கப்ரின் மீது நான் நடப்பதை விடவும் எனக்கு விருப்பமானதாகும். அறிவிப்பர்: உக்பா பின் ஆமிர் (ரழி), நூல்: முஸ்லிம்.

அப்படியானால் அடக்கஸ்தலத்தைக் கைப்பற்றி அதில் வியாபார நோக்குடன் கடைகளை அல்லது வீடுகளைக் கட்டு பவரின் நிலை என்ன? சிந்துப் பார்க்க வேண்டும்.

கப்ருகளில் மல ஜலம் கழிப்பது: சில துாப்பாக்கியசாலிகள் இதனைச் செய்கின்றனர். அவர்களுக்கு மல ஜலத்தினு டைய தேவை ஏற்படடால் சுவர் ஏறிக் குதித்து அல்லது வேறு வழியாக அடக்கஸ்தலத்திற்குள் நுழைந்து தனது அசுத்தம் மற்றும் துர்நாற்றத்தின் மூலம் அங்கு அடங்கப்பட்டிருப்பவர் களுக்கு துன்பம் தருகின்றனர்.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: அடக்கஸ்தலங்களில் மல ஜலம் கழிப்பதும், கடைவீதிக்கு மத்தியில் (வெட்கமின்றி) மல ஜலம் கழிப்பதும் என்னைப் பொருத்த வரையில் ஒரு பொ ருட்டே அல்ல (இரண்டும் சமம் தான்). (இப்னு மாஜா) அதா வது கடைவீதியில் மக்களின் முன்னிலையில் மானம் திறந்த நிலையில் மல ஜலம் கழிப்பது எந்த அளவு மோசமானதோ அதுபோல அடக்கஸ்தலத்தில் மல ஜலம் கழிப்பதும் மோச மான செயலாகும். இன்னும் சிலர் அடக்கஸ்தலங்களில் குறிப் பாக பாழடைந்த மற்றும் சுற்றுப் புறச் சுவர்கள் இடிந்து விட்ட அடக்கஸ்தலங்களில் அசுத்தங்களையும், குப்பைக் கூழங்க ளையும் வீசுகின்றனர். நபிமொழியில் வந்திருக்கின்ற எச்சரிக் கையில் இவர்களுக்கும் பங்குண்டு. அடக்கஸ்தலங்களைத் தரிசிக்கச் செல்லும் போது கவனிக்க வேண்டிய ஒழுக்கங் களில் இதுவும் ஒன்றாகும். அதாவது கப்ருகளுக்கு மத்தியில் செல்ல நாடும் போது பாதணிகளைக் கழற்றி விட வேண்டும்.

## சிறுநீரிலிருந்து தற்காத்துக் கொள்ளாதிருத்தல்

இறைமார்க்கத்தின் சிறப்பம்சம் என்னவெனில் மனிதனுடைய விவகாரங்களைச் சீர் செய்யக்கூடிய அனைத்தையும் அது கூறியுள்ளது. அவற்றில் ஒன்று அசுத்தத்தை நீக்குவது. அதனால் தான் தண்ணீரைக் கொண்டு சுத்தம் செய்வதும், கற்களைக் கொண்டு சுத்தம் செய்வதும் சட்டப்பூர்வமாக அனுமதிக்கப்பட்டுள்ளது. அது மட்டுமா? தூய்மையும் சுத்தமும் எப்படி ஏற்படுமென்ற விபரத்தையும் இம்மார்க்கம் விவரித்துள்ளது. மக்களில் சிலர், அசுத்தத்தை நீக்குவதில் கவனக் குறை வாக இருக்கின்றனர். அதுதான் ஆடையிலோ, உடம்பிலோ பட்டுவிடுவதற்குக் காரணமாக இருக்கின்றது. மட்டுமல்ல தொழுகை கூடாமல் போவதற்குக் காரணமும் அதுதான். மேலும் கப்ரு வேதனைக்கான காரணங்களில் அதுவும் ஒன்றாகும் என்று நபி(ஸல்)அவர்கள் தெரிவித்துள்ளார்கள்.

இப்னு அப்பாஸ்(ரழி) அறிவிப்பதாவது: நபி(ஸல்)அவர்கள் மக்கா அல்லது மதீனாவில் ஒரு தோட்டத்தின் பக்கமாகச் சென்று கொண்டிருந்தபோது இரண்டு மனிதர்கள் கப்ரில் வேதனை செய்யப்படுவதை செவியுற்றார்கள். அப்போது, இவ்விருவரும் வேதனை செய்யப்படுகிறார்கள். ஒரு பெரிய விஷயத்திற்காக இவ்விருவரும் வேதனை செய்யப்பட வில்லை என்று கூறிவிட்டு, ஆம்! (இதைத் தொடர்ந்து வேறொரு அறிவிப்பில் 'அது பெரியவிஷயம் தான்' என்று வந்துள்ளது) அவ்விருவரில் ஒருவர் சிறு நீர் கழிக்கும்போது (சிறு நீர்த்துளி தன்னில் படாமல்) பேணுதலாக இருக்கவில்லை. மற்றொருவர் கோள் சொல்லித் திரிபவராக இருந்தார் என்றும் கூறினார்கள். (புகாரி) இன்னும் சொல்வதானால், 'பெரும்பாலும் கப்ரு வேதனை சிறு நீர் விஷயத்தில் பேணுதல் இல்லாதனாலேயே ஏற்படுகிறது' எனவும் நபி(ஸல்) அவர்கள்தெரிவித்துள்ளார்கள்.

சிறு நீரிலிருந்து தற்காத்துக் கொள்ளாதிருத்தல் என்பது பின்வரும் அனைத்து நிலைகளையும் உள்ளடக்கும். ஒருவன் சிறு நீர் கழிக்கும்போது அது முழுமையாக வெளியேறிவிடுவதற்கு முன்பே அவசர அவசரமாக எழுந்து விடுதல். அல்லது சிறு நீர் கழிக்கும்போது அது தன் மீது தெறிக்கும் விதத்தில் அல்லது தன் பக்கம் அது திரும்பி வரும் இடத்தில் அமர்ந்து சிறு நீர் கழித்தல், அல்லது சிறு நீர் கழித்து விட்டு தண்ணீரால் அல்லது கல், காகிதம் போன்றவற்றால் சுத்தம் செய்யாமல் எழுந்து விடுதல், அல்லது அரை குறையாக சுத்தம் செய்தல்.

இன்று நமது காலத்தில் காபிர்கள் செய்வது போன்று செய்யும் நிலை ஏற்பட்டிருக்கிறது. எவ்வாறெனில் சில கழிப்பிடங்களில் சிறுநீர் கழிப்பதற்கென சுவரை ஒட்டி சில இடங்கள் இருக்கும். கதவுகள் இல்லாமல் அவை திறந்துகாணப்படும். அங்கு நம்மவர்கள் வருவோர் போவோர் முன்னிலையில் கொஞ்சமும் வெட்கமின்றி சிறுநீர் கழிக்கின்றனர். பிறகு சுத்தம் செய்யாமலேயே ஆடையணிந்து கொண்டு சென்று விடுகின்றனர். இவர்கள் ஒரே நேரத்தில் மோசமான விலக்கப்பட்ட இரு காரியங்களை செய்கின்றனர். ஒன்று: மக்களின் பார்வையை விட்டும் தம் மானத்தை மறைப்பதில்லை. இரண்டு: தம் மீது சிறுநீர் படுவதிலிருந்து காத்துக்கொள்வதில்லை, சுத்தம் செய்வதில்லை.

## ஒட்டுக் கேட்டல்

அல்லாஹ் கூறுகிறான்: துருவித் துருவி ஆராயாதீர்கள். (49:12) இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கிறார்கள்: யாரேனும் மக்களின் செய்தியை அவர்கள் விரும்பாதநிலையில் ஒட்டுக் கேட்டால் மறுமையில் அவனுடைய காதுகளில் ஈயத்தைக் காய்ச்சி ஊற்றப்படும். நபிமொழி (தப்ரானி)

அவர்களுக்குத் தெரியாமல் அவர்களுடைய செய்தியை ஒட்டுக் கேட்டு அவர்களுக்கு இடைஞ்சலை ஏற்படுத்துவதற்

காக பிறரிடம் எடுத்துச் சொன்னால் அவன் துருவித் துருவி ஆராய்தல் (அல்லது ஒட்டுக் கேட்டல்) எனும் பாவத்துடன் (கோள் சொல்லுதல் எனும்) இன்னொரு பாவத்தையும் செய் தவனாவான். கோள் சொல்பவன் சுவர்க்கம் செல்ல மாட்டான் என்பது நபிமொழி. (புகாரி)

## அண்டை வீட்டாருக்குத் தீங்கிழைத்தல்

திருக்குர்ஆனில் அல்லாஹ் அண்டை வீட்டார் குறித்து நமக்கு அறிவுரை கூறியுள்ளான்: மேலும் நீங்கள் அல்லாஹ் வை வணங்குங்கள். அவனுக்கு எதனையும் இணையாக்கா தீர்கள். தாய், தந்தையரிடம் நல்ல முறையில் நடந்து கொள் ளுங்கள். மேலும் உறவினர்கள், அநாதைகள், வறியவர்கள், உறவினரான அண்டை வீட்டார், அந்நியரான அண்டை வீட் டார், பக்கத்திலிருக்கும் நண்பர், வழிப்போக்கர் மற்றும் உங் கள் கைவசத்திலுள்ள அடிமைகள் ஆகியோருடனும் நல்ல விதமாக நடந்து கொள்ளுங்கள். திண்ணமாக அல்லாஹ் வீண் பெருமையும் கர்வமும் கொண்டவர்களை நேசிப்பது இல்லை. (4:36)

அண்டை வீட்டாருக்குத் தொல்லை தருவது விலக்கப் பட்ட காரியமாகும். காரணம் அண்டை வீட்டாருக்குச் செய்ய வேண்டிய உரிமைகள் கடமைகள் மகத்தானவை. அபூஹு ரைஹ் (ரழி) அறிவிக்கிறார்கள்: அவன் முஃமினாக மாட்டான் அவன் முஃமினாக மாட்டான் அவன் முஃமினாக மாட்டான் என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறியதும், அல்லாஹ்வின் தூதரே! யார் அவன்? என்று கேட்கப்பட்டது. அதற்கு, எவனு டைய தொல்லைகளை விட்டும் அவனுடைய அண்டை வீட் டார் நிம்மதியாக இல்லையோ அவனே! என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பதிலளித்தார்கள். (புகாரி)

ஒருவர் நல்ல முறையிலோ அல்லது தீய முறையிலோ நடந்து கொள்கிறார் என்பதற்கு, அவரைப் பற்றி அண்டை வீட்டார் புகழ்ந்துரைப்பதை அல்லது இகழ்ந்துரைப்பதையே அளவுகோலாக நபி(ஸல்)அவர்கள் ஆக்கியுள்ளனர்.

இப்னு மஸ்வூத்(ரழி)அறிவிப்பதாவது: ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் அல்லாஹ்வின் தூதரே! நான் நல்ல முறையிலோ அல்லது தீய முறையிலோ நடந்து கொண்டேன் என்பதை எப்படி அறிந்து கொள்வது? எனக் கேட்டார். அதற்கு நபி(ஸல்)அவர்கள், நீ நல்ல முறையில் நடந்து கொண்டாய் என உன்னுடைய அண்டை வீட்டார் கூறுவதை நீ செவியேற்றால் நீ நல்ல முறையில் நடந்து கொண்டவனாவாய். நீ தீய முறையில் நடந்து கொண்டாய் என உனது அண்டை வீட்டார் சொல்வதை நீ கேள்விப்பட்டால் நீ தீய முறையில் நடந்து கொண்டவனாவாய் என்று கூறினார்கள். (அஹ்மத்)

அண்டை வீட்டாருக்கு தொல்லை தருதல் என்பதற்கு பல முறைகள் உள்ளன. அவற்றுள் சில: அண்டை வீட்டாருடன் இணைந்த பொதுச் சுவரில் ஒரு கட்டையை நடுவதைத் தடுத்தல், சூரிய வெளிச்சத்தையும், காற்றையும் அவருக்குத் தடுக்கும் வண்ணம் அவரின் அனுமதியின்றி கட்டிடத்தை உயர்த்திக் கட்டுதல், அவர் வீட்டுக்கு நேராக ஜன்னலைத் திறந்து வைத்து அதன் வழியாக அவருடைய வீட்டின் தனிப்பட்ட விஷயங்களை-நிகழ்கழ்சிகளை எட்டிப் பார்த்தல், தட்டுதல், கத்துதல் போன்ற இடையூறு தரும் சப்தங்களால் அவருக்குத் தொல்லை தருதல்- குறிப்பாக தூங்கக்கூடிய மற்றும் ஓய்வெடுக்கக்கூடிய நேரங்களில், அல்லது அவருடைய குழந்தையை அடித்தல், அவருடைய வாசல்களில் குப்பையை வீசுதல் போன்றவற்றால் அவருக்குத் தொல்லைகள் தருதல்.

அண்டை வீட்டார் விஷயத்தில் செய்யும் பாவம் மிகப் பெரிய பாவமாகும். அவ்வாறு செய்பவனுக்கு அதன் பாவம் பன்மடங்

காகின்றது. ஒருவன் பத்துப் பெண்களுடன் விபச்சாரம் செய்வது தனது அண்டை வீட்டாரின் மனைவியிடம் விபச்சாரம் செய்வதை விட குறைந்த குற்றமாகும்.... அது போல ஒருவன் பத்து வீடுகளில் திருடுவது அவனுடைய அண்டை வீட்டில் திருடுவதை விட குறைந்த குற்றமாகும் என்பது நபிமொழி (அதபுல் முஃப்ரத்)

ஒரு சில துரோகிகள் இரவில் தமது அண்டை வீட்டார் இல்லாத சமயத்தை சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு அவருடைய வீட்டில் நுழைந்து மோசம் பண்ணிவிடுகின்றனர். துன்பம் மிகுந்த வேதனையுடைய நாளில் இத்தகையோருக்கு அழிவு இருக்கிறது.

## மரணசாசனத்தின் மூலம் தீங்கிழைத்தல்

பிறருக்குத் தீங்கிழைத்தல் என்பதும் இல்லை, பிறரால் தீங்கிற்கு உள்ளாவதென்பதும் இல்லை என்பது இஸ்லாமிய மார்க்கத்தின் அடிப்படை அம்சமாகும். அந்த அடிப்படையில் ஒருவன் தனது வாரிசுகளுக்கு (மரணசாசனத்தின் மூலம்) தீங்கிழைப்பது தடை செய்யப்பட்டதாகும். இவ்வாறு செய்கிறவனுக்கு நபிமொழியில் எச்சரிக்கை வந்துள்ளது.

யாரேனும் (பிறருக்கு) தீங்கிழைத்தால் அல்லாஹ் அவனுக்குத் தீங்கிழைப்பான். யாரேனும் (பிறருக்கு) சிரமம் கொடுத்தால் அல்லாஹ் அவருக்கு சிரமம் கொடுப்பான் என்பது நபிமொழி. (அஹ்மத்)

மரணசாசனத்தின் மூலம் தீங்கிழைத்தல் என்பதற்கு பல முறைகள் உள்ளன. தனது வாரிசுகளில் ஒருவருக்கு அவருடைய (சொத்து) உரிமையதைத் தடுத்தல், அல்லது ஒரு வாரிசுக்கு ஷரீஅத் எவ்வளவு நிர்ணயம் செய்திருக்கின்றதோ அதற்கு மாற்றமாக அவருக்கு மரணம் சாசனம் செய்தல், அல்

லது தனது சொத்தில் மூன்றில் ஒரு பகுதிக்கு மேல் மரணசா சனம் செய்தல்.

எந்த நாடுகளில் மக்கள் இஸ்லாமிய ஷரீஅத் அடிப்படை யில் இயங்கக்கூடிய நீதிமன்றங்களுக்குக் கட்டுப்படுதல் என் பது இல்லையோ அந்த நாடுகளில் (இந்தியாவைத் தவிர) ஒரு வாரிசுதாரர் அல்லாஹ் அவருக்கு அளித்த (சொத்து) உரிமை யை நீதிமன்றங்களின் மூலமாக பெறுவது சிரமமான காரியமா கும். காரணம் அந்நீதி மன்றங்களில் ஷரீஅத் சட்டத்திற்கு மாற்றமாக மனிதர்களால் உருவாக்கப்பட்ட சட்டங்களின் அடிப்படையிலேயே தீர்ப்புகள் வழங்குகின்றன. மேலும் ஷரீ அத்திற்கு மாற்றமாக வழக்கறிஞரால் பதிவு செய்யப்பட்ட அநீ தியான மரணசாசனத்தையே செல்லுபடியாக்கும்படி அந்த நீதிமன்றங்கள் உத்தரவிடுகின்றன. அவர்கள் கரங்கள் எழுதி யதும் அவர்களுக்குக் கேடுதான். அவர்கள் சம்பாதித்ததும் அவர்களுக்குக் கேடு தான்.

## Backgam mon எனும் ஒரு வகை சூதாட்டம்

மக்களிடையே பரவலாக வழக்கத்திலுள்ள பெரும்பாலான விளையாட்டுக்கள் ஹராமான காரியங்களை உள்ளடக்கியுள் ளன. அதில் ஒன்று Backgam mon எனும் ஒரு வகை விளையாட் டாகும். இதை விளையாட ஆரம்பித்தால் இது போன்ற பல விளையாட்டுக்களுக்கு இது இட்டுச் செல்லும். உள்ளன. பல சூதாட்டங்களுக்கு வழி திறந்து விடுகின்ற Backgam mon எனும் இந்த விளையாட்டு குறித்து நபி (ஸல்) அவர்கள் இவ்வாறு எச்ச ரித்துள்ளார்கள்: யார் Backgam mon எனும் விளையாட்டை விளையாடுகின்றாரோ அவர் பன்றியின் இறைச்சியிலும் இரத் தத்திலும் கையை நுழைத்தவராவார். அறிவிப்பவர்: புரைதா (ரழி), நூல்: முஸ்லிம்

Backgam mon விளையாட்டை விளையாடியவர் அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் மாறு செய்து விட்டார்! என்பதும் நபிமொழி. அறிவிப்பவர்: அபூமூஸா (ரழி), நூல்: அஹ்மத்

## சபித்தல்

பெரும்பாலோர் கோபப்படும் போது தமது நாவுகளைக் கட்டுப்படுத்த முடியாமல் உடனே சாபமிட்டுவிடுகின்றனர். அந்த நேரத்தில் மனிதர்கள், உயிரினங்கள், திடப்பொருள்கள் காலங்கள், நாட்கள், நேரங்கள் யாவற்றையும் சபித்துவிடுகின்றனர். இன்னும் சொல்வதானால் சில வேளை தங்களையும் தங்கள் குழந்தைகளையும் கூட சபித்துவிடுகின்றனர். மட்டுமல்ல கணவன் மனைவியையும் மனைவி கணவனையும் சபிக்கின்றனர். இது தீய ஆபத்தான செயலாகும்.

...ஒரு முஃமினை சபித்தவன் அவனைக் கொலை செய்தவன் போலாவான் என்பது நபிமொழி. ஸாபித் பின் ழஹ்ஹாக் (ரழி) அறிவிக்கும் இந்த ஹதீஸ் புகாரியில் உள்ளது.

பெண்கள் அதிகம் சபிக்கின்றார்கள். அதுவே அவர்கள் நரகில் நுழைவதற்குக் காரணமாக அமைகின்றது என்பதை நபி (ஸல்) அவர்களும் தெளிவுபடுத்தியுள்ளார்கள். அதுபோல சபிக்கின்றவர்கள் மறுமையில் பரிந்துரை செய்பவர்களாக இருக்க மாட்டார்கள். இதில் ஆபத்தானது என்னவெனில் அநியாயமாக ஒருவனை ஒருவன் சபித்தால் அவனது சாபம் அவன் மீதே திரும்பிவிடுகின்றது. அந்த நேரத்தில் அவன் தனக்கெதிராக தானே இறையருளை விட்டும் தூரமாவதற்குப் பிரார்த்தித்தவனாகின்றான்.

## ஒப்பாரி வைத்தல்

மிகப் பெரும் தீமைகளில் இதுவும் ஒன்றாகும். சில பெண்கள் இறந்தவருக்காக ஓலமிடுகின்றனர், இறந்தவரின் நல்லி

யல்புகளை எடுத்துக் கூறி ஒப்பாரி வைக்கின்றனர். முகத்தி லும், கன்னங்களிலும் அடித்துக் கொள்கின்றனர். அதுபோல ஆடையைக் கிழித்துக் கொள்கின்றனர், தலையை மழித்துக் கொள்கின்றனர், அல்லது தலை மயிரை விரித்துப் போட்டு அதைப் பிய்த்துக் கொள்கின்றனர். இவை யாவும் விதியை பொருந்திக் கொள்ளாததையும் துன்பத்தை சகித்துக்கொள் ளாததையுமே காட்டுகிறது. இவ்வாறு செய்பவர்களை நபி (ஸல்)அவர்கள் சபித்துள்ளார்கள்.

அபூஉமாமா (ரழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்: (துன்பம் ஏற்படும்போது) முகத்தைப் பறண்டுபவளையும், ஆடையைக் கிழிப்பவளையும், நாசமே, கைசேதமே என்று புலம்புபவளை யும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சபித்துள்ளார்கள். (இப்னு மாஜா)

இப்னு மஸ்வூத் (ரழி) அவர்கள் அறிவிப்பதாவது: (துன்பம் ஏற்படும் போது) கன்னத்தில் அடித்துக் கொள்பவனும், சட்டை யைக் கிழித்துக் கொள்பவனும், முட்டாள்தனமாகப் புலம்புவ னும் நம்மைச் சார்ந்தவனல்லன் என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். (புகாரி, முஸ்லிம்)

ஒப்பாரி வைப்பவள், தான் மரண மடைவதற்கு முன்னரே தவ்பா செய்து (திருந்திக்) கொள்ளவில்லையெனில் தார் ஆடை யும் சொரியை ஏற்படுத்தக்கூடிய சட்டையையும் அணிந்த நிலையில் மறுமையில் எழுப்பப்படுவாள் என்பது நபிமொழி. அறிவிப்பவர்: அபூமாலிக் (ரழி), நூல்: முஸ்லிம்

## முகத்தில் அடிப்பதும் சூடு போடுவதும்

முகத்தில் அடிப்பதையும் முகத்தில் சூடு போடுவதையும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தடை செய்துள்ளார்கள் என ஜாபிர் (ரழி) அறிவிக்கிறார்கள். (முஸ்லிம்)

**முகத்தில் அடித்தல்:** சில தந்தையர்களும் ஆசிரியர்களும் குழந்தைகளைத் தண்டிக்கும் போது கையால் அல்லது வேறு பொருளால் அவர்களின் முகத்தில் அறைந்து விடுகின்றனர். அதுபோலவே சிலர் தமது வேலைக்காரர்களை அடித்து விடு கின்றனர். இது ஹராமாகும். மேலும் எந்த முகத்தின் மூலம் அல்லாஹ் மனிதனைக் கண்ணியப்படுத்தி இருக்கின்றானோ அந்த முகத்தை இழிவுபடுத்துவதுமாகும். முகத்தில் அடிப் பது சில வேளை முகத்திலுள்ள சில முக்கியப் புலன்களை இழக்கச் செய்துவிடும். அதனால் வருந்த வேண்டிய நிலை ஏற்படும். சிலபோது பழிக்குப் பழிவாங்க வேண்டிய நிலையும் உருவாகலாம்.

**கால் நடைகளுக்கு முகத்தில் சூடு போடுதல்:** பிராணியின் சொந்தக்காரன் தனது பிராணியை இனம் கண்டு கொள்வதற் காகவும் அல்லது அது காணாமல் போய்விட்டால் அவனிடம் திருப்பி ஒப்படைப்பதற்காகவும் அடையாளத்திற்காக கால் நடைகளின் முகத்தில் சூடு போடுகின்றனர். இது ஹராமாகும். மேலும் இது பிராணியின் முகத்தை அலங்கோலப்படுத்துவ தும் பிராணியை வதைப்பதுமாகும். இவ்வாறு செய்வது எங்கள் குலத்தின் வழக்கமும், எங்கள் குலத்தின் விஷேச அம்சமுமா கும் என சிலர் வாதிட்டாலும் சரியே! ஆயினும் முகமல்லாத இடங்களில் அடையாளத்திற்காக சூடு போடுவது கூடும்.

## முஸ்லிமை வெறுத்தல்

முஸ்லிம்களுக்கு மத்தியில் உறவு முறிவை உருவாக்கு வது ஷைத்தானின் சூழ்ச்சிகளில் ஒன்று. ஷைத்தானின் அடிச்சுவடுகளைப் பின்பற் றுகின்ற பெரும்பாலோர் மார்க்கம் அனுமதிக்காத காரணங் களுக்காகவெல்லாம் தம் சகோதர முஸ்லிம்களை வெறுக்கின்றனர், தங்களிடையே உள்ள உற வை முறித்துக் கொள்கின்றனர். ஒன்று கொடுக்கல் வாங்க

லில் ஏற்பட்ட ஏதாவது கருத்து வேறுபாடு காரணமாக இருக் கலாம். அல்லது வேறு ஏதாவது அற்பமான காரணமாக இருக் கலாம்.

இந்த உறவு முறிவு நீண்ட காலத்திற்கு நீடிக்கும். சில சமயம், நான் உன்னிடம் பேசவே மாட்டேன் என சத்தியம் செய்து விடுகின்றனர், அவன் வீட்டு வாசல் படியில் கூட மிதிக் கக் கூடாதென சத்தியம் செய்கின்றனர். வழியில் அவனைக் கண்டால் புறக்கணித்து விடுகின்றனர். ஏதேனும் ஒரு சபை யில் அவனை சந்தித்தால் அவனுக்கு முன்னால் பின்னால் இருப்பவரிடம் மட்டும் முஸாஃபஹா செய்து விட்டு அவனைத் தாண்டிச் சென்று விடுகின்றனர். முஸ்லிம் சமுதாயம் பலவீன மடைவதற்கு இதுவும் ஒரு காரணமாகும். இதனால் தான் இது விஷயத்தில் இஸ்லாமியச் சட்டமும், எச்சரிக்கையும் மிகக் கடுமையானதாக இருக்கிறது.

அபூஹுரைரா (ரழி) அவர்கள் அறிவிப்பதாவது: தன் சகோ தரனை மூன்று நாட்களுக்கு மேல் வெறுப்பது எந்த முஸ்லி முக்கும் ஆகுமானதல்ல. அவ்வாறு மூன்று நாட்களுக்கு மேல் யாரேனும் வெறுத்து அந்த நிலையில் அவர் மரணமடைந்தால் நரகம் செல்வார் என நபி (ஸல்) கூறினார்கள். (அபூதாவூத்)

அபூகராஷ் (ரழி) அவர்கள் அறிவிப்பதாவது: ஒருவன் தன் சகோதரனை ஒரு வருடம் வெறுத்தால் அவன் அவனைக் கொலை செய்தவன் போலாவான் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். நூல்: அதபுல் முஃப்ரத்

முஸ்லிம்களுக்கு மத்தியில் உள்ள உறவைத் துண்டிப்பத னால் விளையும் தீங்குகளில் இறைவனுடைய மன்னிப்புக் கிடைக்காமல் போவது ஒன்றே போதும்.

ஒவ்வொரு வாரமும் இரு முறை- திங்கள், வியாழன் ஆகிய இரு நாட்களில் மனிதர்களின் செயல்கள் (இறைவனிடம்) எடுத்

துக் காட்டப்படுகின்றன. அப்போது மு.ஃமினான ஒவ்வொரு அடியாருக்கும் மன்னிப்பு வழங்கப்படும். பகைத்துக் கொண்ட இருவரைத் தவிர. அவ்விருவரையும் விட்டு விடுங்கள் அல்லது அவ்விருவரின் விவகாரத்தை ஒத்திப் போடுங்கள்- அவ்விரு வரும் சமாதானம் ஆகும் வரை! என வானவர்களிடம் கூறப் படும். அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரழி), நூல்: முஸ்லிம்

சண்டைபோட்டுக் கொண்ட இருவரில் யார் அல்லாஹ் விடம் பாவமன்னிப்புக் கோரி திருந்துகிறாரோ அவர் தன் நண்ப ரிடம் சென்று ஸலாம் சொல்ல வேண்டும். இப்படி அவர் நடந்து கொள்ளும் பட்சத்தில் அவருடைய நண்பர் அவரை (ஏற்க) மறுத்து விட்டால்-அவருடைய பொறுப்பு நீங்கி விடும். (அவர் மீது எந்தக் குற்றமும் இல்லை) மறுத்தவர் மீதே குற்றம் எஞ்சி யிருக்கும்.

அபூஅய்யூப் அல்-அன்ஸாரி (ரழி) அறிவிக்கிறார்கள்: ஒருவர் தன் சகோதரனை மூன்று நாட்களுக்கு மேல் பகைத்துக் கொள்ளக் கூடாது. இருவரும் சந்திக்கும்போது ஒருவரை ஒருவர் புறக்கணித்துச் செல்லக் கூடாது. அவ்விருவரில் யார் முதலில் ஸலாம் சொல்கிறாரோ அவரே சிறந்தவர் என நபி (ஸல்) கூறினார்கள். (புகாரி)

ஆனால் இவ்வாறு பகைத்துக் கொள்வதற்கு தொழுகை யை விடுதல், மானக்கேடான காரியங்களில் பிடிவாதமாக இருத்தல் போன்ற மார்க்க ரீதியான காரணம் இருந்தால், அதே நேரத்தில் பகைத்துக் கொள்வது தவறிழைப்பவனுக்கு பலனளிக்கும் என்றிருந்தால் - அதாவது அவன் தன் தவறை உணர்ந்து சரியான நிலைக்குத் திரும்புவான் என்றிருந்தால் பகைத்துக் கொள்வது கடமையாகின்றது. ஆனால் பகைத் துக் கொள்வதால் தவறிழைத்தவன் மேலும் வரம்பு மீறிய போக்கையே மேற்கொள்கிறான், பாவம் செய்வதிலேயே பிடிவா தமாக இருக்கிறான் எனில் இந்த நேரத்தில் பகைத்துக்

கொள்வது பொருத்தமாக இருக்காது. ஏனெனில் அதனால் மார்க்கம் விரும்புகின்ற நன்மை ஏற்படாது. மாறாக தீமையே அதிகரிக்கும். எனவே இதுபோன்ற சமயத்தில் அவனுக்குத் தொடந்து அறிவுரை வழங்குவதும் நல்லுபதேசமும், நல்லு பகாரமும் செய்வதுமே ஏற்றமானதாகும்.

## முடிவுரை:

இதுவரை மக்களிடத்தில் பரவலாகக் காணப்படுகின்ற விலக்கப்பட்ட காரியங்களை முடிந்த வரை இங்கு கூறியுள் ளேன். எல்லாம் வல்ல அல்லாஹ்விடம் அவனுடைய திருப் பெயர்களின் மூலம் இறைஞ்சுவோமாக! அவன் நமக்கும் அவ னுக்கு நாம் மாறு செய்வதற்குமிடையில் அரணாக இருக்கக் கூடிய இறையச்சத்தையும், அவனுடைய சுவனத்தின் பால் சேர்த்து வைக்கக்கூடிய வழிபாட்டையும் தருவானாக!

நம்முடைய பாவங்களையும், நம்முடைய காரியங்களில் நாம் வரம்பு மீறுவதையும் அவன் மன்னித்தருள்வானாக! அவன் விலக்கிய விலக்கல்களை விடுத்து அவன் ஹலாலாக் கியவற்றை மட்டும், அவன் அல்லாதவர்களை விடுத்து அவனு டைய அருளை மட்டும் நமக்குப் போதுமாக்கித் தருவானாக! நம்முடைய பாவங்களைக் கழுவி, நம்முடைய தவ்பாவை ஏற்றுக் கொள்வானாக! திண்ணமாக அவன் யாவற்றையும் செவியேற்பவனும் (அழைப்பவரின் அழைப்புக்கு) பதில் தருப வனும் ஆவான். மேலும் நபிகள் நாயகம் முஹம்மத் (ஸல்) அவர்கள் மீதும் அவர்களுடைய குடும்பத்தினர் மற்றும் தோ ழர்கள் அனைவர் மீதும் அவனுடைய கருணையும் சாந்தியும் உண்டாவதாக! எல்லாப் புகழும் அகில உலகத்தின் அதிபதி யாகிய அல்லாஹ்வுக்கே!

# பொருளடக்கம்

